"His Royal Highness desires me to express to Mr. Swaminatha Aiyar his best thanks."—See Wrapper p 3.

REGISTERED—M. 108.

VOL. XVIII] JUNE 1910. [No. 3.

லேசான காகிதப் பதிப்பு.
தனிப்பிரதி, 5½ அணா.
பழைய பிரதி, 6 அணா.

சந்தா விலை விபரம்.
ஒரு வருஷத்திற்கு ரூ. 4.
ஆறு மாதத்திற்கு ,, 2-2.




*Devoted to practical Truth and Knowledge.*

அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்:-திருக்குறள்.

A POPUL NEW REVIEW AND TAMAL MONTHLY, ESTD. MAY, 1892.

கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக : திருக்குறள்.

ILLUSTRATING THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SOUL - CULTURE & ETHICS.

*Adapted for Use in Homes & Schools.*

["Hitch Your Wagon to a Star"—Emerson.]

CONTENTS.



அட்டவணை.



["Our Theism is the Purification of the Human Mind"—Emerson.]

Thick Paper Edition for Patrons.]

PUBLISHED BY

[Minimum Subscription Rs. 5.

**The Secretary, Diffusion of Knowledge Agency,**

*Lalitalaya, Mylapore, Madras, S.*

*For The Viveka Chintamani publishing Committee.*

[...aper Edition for the People.]

[Subscription Price: Yearly Rs. 4.



*"Like a spider, like the earth, and like a living creature He produces the Universe."—Sruti.*

# THE VIVEKA CHINTAMANI.

ESTABLISHED 1892.

The Oldest and the Best Tamil Monthly: Yearly Rs. 4.

Thick Paper Edition Rs. 5. in Advance.

Subscriptions registered by Volume only and cannot be discontinued in the middle of a Volume.

**EDITOR** LALITALAYA, MYLAPORE.

**C. V. Swaminatha Aiyar.** *Madras, S. June, 1910*

---

## விவேகசிந்தாமணி.

வருஷசந்தா ரு. 4, வாலியம் கணக்காகவே சந்தா பதிவுசெய்யப்படும்.

### விவேகசிந்தாமணிக் கமிட்டி விண்ணப்பம்.

ஆரிய சகோதரர்களே! விவேகசிந்தாமணி, இனி மாதந்தோறும் ஒழுங்காக வெளியாகி வரும். ஸாதாரண வருஷ முதல் மிகவும் அருமையான விஷயங்களெல்லாம் வெளிவரும். ஸித்தர்கள் ஸாதநமுறை, யோகம், பக்தி, ஞானம் முதலான ஸாதநமுறைகள் வெளியிடப்படும். விவேகசிந்தாமணி யென்ற பெயர்க்கேற்றபடி இதில் விவேகத்தை விளைக்கக்கூடிய அற்புத விஷயங்கள் நிறைந்திருக்கும். இக்காலத்துக்கேற்றபடி தேசாபிமானம், பாஷாஞானம், நீதிபோதம், வேதாந்தசாரம், சுதேச விதேச சரித்திரங்கள், மஹாத்மாக்களின் அமிருத வசனங்கள், பகவான் அர்ச்சுனனுக்குப் போதித்த நித்தியானுகூல ஸாதனங்கள், அப்போதப்போது நடக்கும் விசேஷ ஸம்பவங்கள், ஆகிய இவைகள் அடங்கப்பெற்றுச் செந்தமிழ் நடையில் எழுதப்பட்டுத் தமிழ்நாடெல்லாம் ஜ்வலித்துவரும். இம்மாதாந்தப் பத்திரிகைக்கு ஒவ்வொருவரும் சந்தாதாரராகச்சேர்வதுடன் தங்கள் நேசர்களுக்கும் காட்டி அவர்களையும் வாங்கும்படிசெய்து ஆதரித்துவரக்கோருகிறோம். மனிதர்களுக்கு உய்யும்வழிகாட்டி அவர்களைக் கடைத்தேறச் செய்யும் உண்மையான ஸத்குருவைப்போல் விவேகசிந்தாமணியை வாசிப்பவர்களுக்கு அது உற்றவிடத்துதவியாய் நின்று விவேகத்தை வளர்க்கும் குருவாய்த்தோற்றுமென்பதிற் சிறிதும் சந்தேகமில்லை. பத்திரிகையை முழுதும் படித்துக் கையொப்பக் காரர்களாய்ச் சேரவும், இதரர்களையும் அப்படியே சேரும்படி செய்யவும் கேட்டுக்கொள்கிறோம். இப்பத்திரிகை சென்ற பதினேழு வருஷங்களாக இடையறாது நடைபெற்று வந்து, இடையே அச்சாபீஸார் செய்த தவறுதலால் இடர்ப்பட்டு சஞ்சிகைகள் தவக்கப்பட்டாலும், அதனால் குற்றமின்றி பத்திரிகை தொடர்பிடியாய் நடந்துவர ஏற்பாடாகி 17-வது வால்யம் 12-சஞ்சிகைகளும் சரியாக முடிந்துவிட்டன.

### 1910ளு ஏப்ரல் - மே முதல் 18-வது வால்யம் ஆரம்பம்.

சி. வி. ஸ்வாமிநா தய்யர்.
பத்திராசிரியர்.

எம். கே. நாராயணஸ்வாமி ஐயர், பி-ஏ., பி-எல்.
விவேகசிந்தாமணிக்கமிட்டி காரியதரிசி.

### ORDER FORM.

ஐயா,

Please enrol me as a Subscriber and send the Vivekachintamani by V. P. P. for a year's subscription, viz Rs. 4-1-0.

ஐயா, விவேகசிந்தாமணிக்கு என்னையும் ஒரு சந்தாதாரராகச் சேர்த்துக்கொண்டு முதல் சஞ்சிகையை ஒரு வருஷ சந்தா ரூபா 4-1-க்கு V. P. P. மூலமாக அனுப்பக் கோருகிறேன். தவறாமல் தபாலாபீஸில் பணம் கட்டிப் பெற்றுக்கொள்கிறேன்.

பேர் ____________________

தொழில் ____________________

ஊர் விலாசம் ____________________

போஸ்ட் ____________________

☞ தனிப்பிரதிக்கு ஒற்றைசஞ்சிகையானால் அணா 5½, இரட்டை சஞ்சிகையானால் அணா 10, அனுப்பவும்.

உ

*Give me not O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you find it." But,*
*"Make your Choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**Speak the Truth.**

"Hitch your wagon to a Star". "To Thine Own Self be True".




*அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்சத்.]* [God is Love. Knowledge is Power. *Aum*

ஸத்யமே ஜெயம்—**Satyameva Jayati.**

பு. **18.**] **1910**௵ ஜுன்௴, சாதாரண௵ ஆனி௴ [ச. **3.**

# *The King's Sympathy and India's Ideal.*

"I have realised the patience, the simplicity of spirit, the loyal devotion, and the religious spirit which characterise the Indian peoples. I know also their faith in the Justice and integrity of our rule. I cannot help thinking from all I have heard and seen that the task of Governing India will be made the easier if we, on our part, infuse into it a wider element of sympathy. I will venture to predict that to such sympathy there will be an ever abundant and genuine response."—*The King's Speech at the Guild-hall Banquet, on his return from India & the Colonies.*

"I can assure you and all our other friends in this great and wonderful land that we leave India with feelings of gratitude and affection. We have seen and have learnt India. We have seen enough to make India a living reality to us, enough to make us wish that we could see more and to implant for ever in our hearts a sympathy and an interest in all that affects our fellow subjects in India—of whatever creed or race.

We have gained impressions which with further study and observation will enable me to try and understand some of the problems of British Administration. In bidding India farewell, I can truly say that our visit has been to us an unending and unbroken series of happy and most instructive experiences."—*H. M. King George V on the Occasion of his leaving India on the completion of his Royal Tour in 1905 - 06.*



## அரசர் அனுதாபமும் இந்தியாவின் லக்ஷியமும்.

"உள்ளம் உருகவுருகக் கள்ளம்கரையக் கரைய" என்பது ஆன்றோர்வாக்கு. இன்னருட்சக்தியாம் "ஸ்ரீகுரு" மூர்த்தமாய் விளங்கிய என்தாய் இம் மூதுரையை அடிக்கடி யெடுத்துரைப்பள். "ஒன்றேகுலமும் ஒருவனே தேவனும், நன்றே செய்மின் நாணுமே" யென்றோதிய திருமூலதேவர், "மன்குல மெல்லாம் ஒன்றே; இந்த ஓரேகுலத்துக்கு தேவனும் ஒன்றே; யென்று ஓதியதெப்படி? ஊனுணர்வொழித்து உள்ளுணர்வுணர்ந்தார்க்கு வீணான வர்ணபேதங்களெல்லாம் ஒழிந்துபோம். சூரிய ரஸ்மி ஊனக்கண்ணுக்கு வெளிச்சமாய் மட்டும் தோற்றுகிறது, எல்லாவர்ணங்களையும் விளங்கச் செய்வதாயினும் அதற்கு வர்ணமில்லை: ஆனால் அந்த சூரிய ரஸ்மியை த்ரிகோணவடிவான ஒரு ஸ்படிகத் துண்டு வழியாய்ச் செல்லவிட்டுப் பார்த்தால், "இந்திரவில்" போல் ஸப்தவர்ணங்களும் அதில்வெகு அழகாய்ச் சேர்ந்து விளங்குவது கண்ணுக்குப் புலப்படும். அஃதேபோல, ஸப்தவர்ணங்களையும் ஒருமுகமாகச் சேரத்தக்க உபாயம் செய்தால், ஏழுவர்ணங்களும், ஒன்று சேர்ந்து வெள்ளைஜ்யோதியாகக்காணும். இதிலிருந்துவெள்ளையென்பது ஒருவர்ணமல்லவென்றும், இந்திரதனுவில் காணப்படும் ஸப்தவர்ணங்களின் சமஷ்டி ரூபமே வெள்ளை யென்றும் தெரியவரும். இப்படி ஒன்று பலவாக விரிவதும், பலவாக விரிந்தது ஒன்றாகக் கூடிவிளங்குவதும் பிராகிருத தர்மமாம். இந்த வேற்றுமையும் ஒற்றுமையும் பிரகிருதியில் ஸ்வபாவமாக நிகழும். இப்படி நிகழ்வதை ஸ்வபாவமென்றுணர்வதே உள்ளுணர்வு. அஃது எப்படி?

உள்ளம் என்பது அந்தக்கரணம். இது விஷயப்பற்று காரணமாய் மலினப்பட்டு கடினமாயிருக்கிறது. இப்படி மலினப்பட்டு கடினப்பட்ட அந்தக்கரணமே, "மனம்" என்றும், "மாயை" யென்றும் சொல்லும் தத்துவமாக மாறுகிறது. மனோ தத்துவத்தின் மலினம் நீங்க, அது கடினப்பட்டிருப்பது நீங்கி இளகியுருகவேண்டும். மனம் இளகுவதற்குக் காரணம் என்ன? அனுதாபசிந்தை: அப்படியென்றால், தன்னைப் பிறனாகவும், பிறனைத் தானாகவும் சிந்திக்கும் சக்தியாம். இந்தச்சக்தி ஸ்வபாவமாயுள்ள ஆத்மசக்தி: அறிவுள்ள விடத்தில் அனுதாப சிந்தையிருக்கும். அநுதாப சிந்தையினாலேயே அறிவு விர்த்தியாகிறது. அனுதாப சிந்தையிற் பழகிப் பழகித் தேர்ந்து முதிர்ந்தால், அதற்கு "ஜீவகாருண்யம்" என்று சொல்கிறது. "அனுதாப சிந்தை" யென்பது இளங்கொடி. "ஜீவகாருண்யம்" என்பது அவ்விளங்கொடி வளர்ந்து முதிர்ந்து படர்ந்து எங்கும் பரவிப் பலனைத்தரும் பக்குவம் பெற்றது.. யேசுநாதர், "I am the Vine; and My Father is the Husbandman." என்று ஒரு பரார்த்தமான கதைசொல்லியிருக்கிறார். திராக்ஷைக்கொடிபோலும் தன்மையுள்ளது அனுதாபசிந்தை. இதையே மானுஷீகம் என்றுசிறப்பித்துக்கூறுவது. அனுதாபசிந்தையில்லாதவன் மிருகப் பிராயத்தவனாவன். அம்மானுஷீகத் தன்மையாம் அனுதாபசிந்தையை தெய்விகத்தன்மை பொருந்திய ஜீவகாருண்யமாக வளரச்செய்து பலனைக்கொடுக்கச் செய்பவன் பரமபிதாவாகிய தேவன். இந்த ஜீவகா

ருண்யமாம் திராக்ஷப்பழங்களின் மதுரமான ரஸமே "ஆனந்தம்" என்று சொல்வது. இந்த ஆனந்தத்தின் மூலமே "பரங்கருணை" யென்று சொல்லும் கடவுளின் பரமலக்ஷணம். இந்த ல்க்ஷணத்துக்கு இருப்பிடமா யிருப்பதொன்றெதுவோ அதுவே "பரம்பொருள்", "பரலக்ஷியம்" என்று சொல்வது. திராக்ஷத்தோட்டம் போட்டவன், திராக்ஷயின் புளிப்பை நாடினவனல்ல; திராக்ஷப்பழத்தின் புளிப்பு அதன் உண்மைக்குணமல்ல; ஆனல் அதன் அபக்குவத்தைக் காட்டுமோர் குறியாம். அப்படியே மனிதனுடைய உள்ளமும் (அந்தக்கரணம்) அனுதாப சிந்தையால் "உருகி உருகி", அதிலுள்ள "கள்ளம் (புளிப்பு) கரையக்கரைய" அது தித்திக்கும் திராக்ஷரஸம்போல் பக்குவப்பட்ட உள்ளுணர்வாகும். இந்த "உள்ளுணர்வே" அதன்பக்குவமுதிர்ச்சியில், பிரஹ்மமாக" அதாவது, "எல்லாமாய் அல்லவுமாய், விளங்குகிறது. "எல்லாமாய்" என்றதனல் எல்லாவற்றிலும் அந்தர்யாமியாய் விளங்குந் தன்மையால் சமஷ்டியில் அவற்ருேடு அபேதமாய் விளங்கியும், "அல்லவுமாய்" என்றதனல் வியஷ்டியில் ஒவ்வொன்றுக்கும் உள்ளுறைந்தும் அஃதோ டொட்டாது(விஷயபப்பற்றின்றி) வேருயிருப்பதால், பேதமாயும் அதாவது அந்நியமாயும் விளங்குவது என்பது குறிக்கப்பட்டது. அறிவு சமஷ்டியில் ஒன்றும், வியஷ்டியில் பல்வேறுமாய் விளங்கும். ஏன், இப்படி விளங்கவேண்டுமென்றல், "உபாதிபேதத்தால்" என்பர்மேலோர். பார்ப்பான் ஒருவனயினும் பல்வேறு வர்ணமுற்ற கண்ணுடிகளின் வழியாகிப் பார்ப்பதால், காண்பான், காண்பொருள், இரண்டும் ஒன்றேயாயினும், காட்சி மட்டும் வேறு பட்டு விளங்குவது போல, அறிவு ஒன்றேயாயினும், ஊனின் (உடம்பின்)வேற்றுமையால், அறிவானும், அறிபொருளும் ஒன்றேயானபோதிலும் (உபாதிவிசேஷத்தால்) அறிவு பேதப்பட்டு விளங்கும். இதைத்தான் பகுத்தறிவு என்று சொல்கிறது. பேதபுத்தி யென்றும் சொல்லுவர். "பகுத்தறிவு" பேதத்தைக் காட்டுவதுபோல, "தொகுத்தறிவு" அபேதமாம் ஒற்றுமையைக் காட்டும். இந்த இரண்டின் இலக்ஷணத்தையும் நன்ருக ஊன்றிப் பார்த்து உள்ளத்தில் வைக்கவேண்டும்.

மரம் என்கிற விசேஷ வுணர்வுண்டாகும் போது மரத்தின் வேற்றுமைகளெல்லாம் உணர்விற்படும். மரத்தை விட்டுத் தோப்பு என்கிற பொது ஞானம் உதிக்கும்போது மரத்தின் வேற்றுமைகள் தோப்புஎன்னும் சமஷ்டிபாவ பொதுலக்ஷணத்தில் மறைந்து விடுகிறது. இப்படியே மரம் என்கிற பொதுப்பேருக்கும், மரத்தாலான யானை முதலிய நாமரூப லக்ஷணங்களுக்கு முள்ள வித்யாஸத்தை நன்ருக விசாரித் துணரல்வேண்டும். மரத்தினல் ஒரு மதயானைபோன்ற உருவம் சமைக்கப்பட்டிருந்தால், அந்த "மரம்" என்கிற விசேஷ பதார்த்தத்துக்கும், "ஆனை" யென்கிற நாமரூபலக்ஷணர்த்த விசேஷியத்துக்கு முள்ள சம்பந்தத்தை யுள்ளபடி ஆய்ந் துணரவேண்டும்.

"சித்தவிருத்தி நிரோதனம்" செய்து உள்ளதை ஊன்றிப்பார்த் துணர்ந்தார்க்குப் பின்வரும் திருமந்திரோப தேசத்தின் பொருள் விளங்கும்.

"மரத்தை மறைத்தது மாமதயானை
மரத்தில் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதற் பூதம்."

நாமரூப லக்ஷணங்களோடு கூடிய "மாமத யானை" என்னும் உருவஞானம், அருவமாயுள்ள (வேலை செய்யப்படாததற்கு முன்னிருந்து பின்னுமுள்ள) "மரம்" அல்லது 'கட்டை' யென்கிற அபேதஞானத்தை மறைத்தது. யானையின் உருப்பமைப்புகளா யிசைந்த எல்லாம் மரமே யென்கிற பொதுவான பூர்வஜ்ஞானம் உண்டானபோது,"மாமதயானை" என்கிற விசேஷஜ்ஞானம் மறைந்துபோய்விட்டது.

பொதுவாயுள்ள "பூர்வஜ்ஞானத்தை" "ப்ரஜ்ஞானம்" என்றும், விசேஷமாயுள்ள விருத்திஞானத்தை "விஞ்ஞானம்" என்றும் சொல்லுவர் மேலோர்.

"ப்ரஜ்ஞானம் ப்ரஹ்மம்." "விஞ்ஞானம் விருத்தி." ப்ரஜ்ஞானத்தை விஞ்ஞானமாகப் பெருக்கி எல்லாம் அதுவே யென்றுணர்ந்து, உணர்ந்ததோர் உணர்வும் ஒழிந்து உள்ளுணர்வு மாத்திரமாக மிஞ்சி நிற்பது ஸ்வாநுபவமாம். இந்த ஸ்வாநுபவம்தானே துரியாதீதத்திற் போல் ஜாக்ர, ஸ்வப்ன, சுஷுப்தி, மூன்றிலும் இம்மூன்றும் ஒன்றாய் விளங்கும் துரியத்திலும் உறுதியாய் உள்ளதென்று உள்ளத்தே திடமுண்டாகி நிச்சலனமா யிருப்பது சித்தாந்தம். இப்படியாகவேதாந்தத்தின்உறுதியே சித்தாந்தம். ஆதியிலுள்ளது அறிவு ஒன்றே. அந்த அறிவுதானே விஞ்ஞானத்தால் பார்முதற் பூதமாய்ப் பரந்து விரிந்தது. அதாவது அந்த அறிவின் "விருத்தியே" நாமரூப பிரபஞ்சங்களாக அமைந்து அண்டபிண்டங்களாகஆயிற்று. அந்த விருத்தி யறிவின் முடிவே வேதாந்தம். அது "ப்ரஜ்ஞானம் ப்ரஹ்மம்" என்று ஓதும். அஃதை யாராய்ந்து தேர்ந்து, அஹம், துவம், இதம், (நான், நீ, இது) என்கிற முப்பொருளையும் அதுவாகவே யறிந்தமர்வது சித்தாந்தம். இப்படி யெல்லா மொன்றேயென்றுணர்ந்து விசாரமற்று அலையோய்ந்த சமுத்திரம்போல் மனதில் சலனம் நீங்கி விளங்குவது அத்வைதம். இது "வேதாந்த சித்தாந்த சமரஸ நன்னிலை." இந்நிலை பெற்ற சித்தர்களே (சாதனம் பற்றிச் சாதித்த சாத்தியர்களே) அவதார புருஷர்கள் ஆவர். அவர் தம் இச்சாமாத்திரத்தால் தோன்றுவர், மறைவர், இருப்பர், இறப்பர். † இவையெல்லாம் செய்தும் ஜனனமரண முண்டென்று கனவிலும்நினையார். நமக்கு நினைப்பும் மறப்பும்போல் அவர்களுக்குப் பிறப்பும் இறப்பும். இப்பேர்பட்ட அவதார புருஷர்கள் ஜனிக்கப் போகிற (அதாவது, மன்குல க்ஷேமவிர்த்தியைப் பற்றி நினைக்கப்போகிற) காலத்தில் அரசுரிமைக் கேற்றவர் அனுதாப சிந்தை நிறைந்தவராகவே யிருக்கவேண்டும். ஹிருதயத்திலே அனுதாபசிந்தை யொன்றுமட்டும் நிறைந்திருந்தால், திராக்ஷைக் கொடி பயிரிடுவது போல, அவர்கள் அஃதொன்றைக் கொண்டு எல்லாம்தானே ஸ்வபாவமாக உண்டாகச் செய்வர். ஆதலால் நம் தேசத்துக்கு அதிபதியாக வமைந்துள்ள புதிய அரசரும் சக்ரவர்த்தியுமாகிய மாக்ஷிமை தங்கிய ஐந்தாவது ஜார்ஜ் அவர்கள் இக்காலத்துக்கு இன்றியமையாத இவ்விலக்ஷணம் பொருந்தி யிருப்பதை நினைக்க மனமுவந்து, அஃதை யெல்லாருக்குமெடுத்து துணர்த்துவன். அவர் 1905 - 6 - ம் வருஷத்தில் இந்தியாவிற்கு விஜயமாய் வந்து விட்டுப்போனபொழுதும், அதன் பின்னரும் வரைந்ததோர் சங்கதியை முகட்டிலெடுத் தச்சிட்டிருக்கிறோம்.

அவருக்கு இந்தியா அத்தை பாட்டி கதையிற் கேட்டதோர் கந்தர்வ தேசமல்ல. உண்மையாக வுள்ளதென்று அதன் குணலக்ஷணங்களை நேரில் கண்டுணர்ந்தவரா யிருக்கிறார். அவர் தம் தர்மபத்னியோடு, இந்தியாவைக் கண்ணாரப்பார்த்து மனதாரவுணர்ந்திருக்கிறார். இதை அவர் தாமே உள்ளம்பூரிக்க வுணர்த்தியிருக்கிறார். இந்தியாவைப் பார்த்தமட்டில், இன்னும் அத்தேசத்தையும் அதன் ஜனங்களையும் நன்றாக வுணர்ந்து அவர்களிடத்து அனுதாப சிந்தை தம் உள்ளத்தூறிப் பெருக வேணுமாய்ச் சிந்திக்கச் செய்திருக்கிறது. அவர் உள்ளக்கருத்தை உள்ளபடி அவர் வெளியிட்டிருக்கிறவாறே இதை வாசிப்போருள்ளத் துறைக்கும்படி யுணர்த்த வேண்டுமானால், அவர் வாய்மொழியைத் தமிழ் மொழியில் இவ்வாறு முணர்த்துவதொக்கும்:—

† Compare St, John X 17, 18.

இந்தியர்களின் சாந்தம், சுத்தம், பக்திவிசுவாஸம், ஆஸ்திகபுத்தி இவைகளை யுணர்ந்து இந்தியரையாள அனுதாபகுணம் வேண்டுமென்றும், அனுதாபம் காட்டினால் இந்தியர் மிகவும் நன்றியுள்ளவராக விருப்பார்களென்றும் சொல்லியிருப்பதோடு பின்னும் எழுதியிருக்கிறார்,—

" இந்தியாவோர் மஹத்தானதேசம்: பார்க்கப்பார்க்க அதிர்சயம் விளைப்பது: இப்பூமண்டலத்தி லதிர்சயமான இத்தேசத்தைப்பார்த்த நாங்கள் (தாமும் தம் பத்னியும்) அன்பும் ஆர்வமும் நிறைந்தவர்களாய் அதைவிட்டுப்போகிறோம். இந்தியாவைக்கண்ணாரக்கண்டுகளித்தோம். மனதாரவுணர்ந்து மகிழ்ந்தோம். இந்தியாவை என்றென்றைக்கும் மறக்கக் கூடாதபடி அதைவேண்டுமட்டும் பார்த்தோமானோம். தின்னத் தெவிட்டாத தேனமுதம்போல், இந்தியாவைப் பின்னும் பார்த்துப் பார்த்துப் பழகி, இந்தியாவிலுள்ள எங்கள் உடன்பிரஜைகளான எல்லா ஜாதிமதஸ்தர்களின் க்ஷேமலாபத்திலும் ஒரு அக்கறைபிறந்து எங்கள் ஹிருதயகமலத்தில் அனுதாப சிந்தையென்னும் தேன் கசிந்தூறும்படியாக வேண்டுமென்றுண்மையாய்ச் சிந்திக்கலானோம். இப்பொழுது பச்சைமரத் தாணிபோல் 'மனதிற்பதிந்த உண்மைகளைக்கொண்டு, இன்னும் இந்தியாவைப்பற்றி நன்றாகத் தீரவிசாரித்து வாசித்துணர்வதால், இந்தியாவில் பிரிடிஷ்துரைத்தனத்தார் செய்யக் கடமைப் பட்டுள்ள கிருதகிருத்தியங்கள் சிலவற்றை ஐயந்திரிபற ஆய்ந்தறியக்கூடியவனாவேனென்று நினைக்கிறேன். இந்தியாவினின்றும் விடை பெற்றுக்கொண்டு போகும் இத்தருணத்தில்; இந்தியாவிற்குவந்து பார்த்ததில் ஆதியோடந்தமாய் மனதுக்குச்சந்துஷ்டியையும் அறிவுவிர்த்தியையும் கொடுப்பதான அனுபவங்களை யெங்களுக்கு நேர்ந்தன வென்பதை நான் உண்மையா யுரைக்கிறேன்." இந்த 'அறிவு விருத்தி' அனுதாபசிந்தையினால் பூரண அறிவாகவும், "மனசந்துஷ்டி" அறிவானந்தமாகவும், அனுதாபசிந்தையின் விசேஷத்தால் வளர்ந்து வருமாயின் இந்தியா சித்தர்கள் வசிக்கும் ஞானபூமியென்றும், புனிதமான அதன் மண்ணைமிதித்த மன்னர்களும், மஹாத்துக்களாய் மாறி, " நான் மனிதர்களுக்குள் அரசனாயிருக்கிறேன்'' என்று சொல்லிய பகவத்வாக்கியம் பொய்க்காது உலகில் பிரசித்திபெறுமென்பது ஸ்பஷ்டமாம். இந்தியா " ஞானபூமி '' யென்பது உண்மையாயின், ராஜலக்ஷ்மி, அகண்டானந்தலக்ஷ்மிக்குப்பெண்ணாய் விளங்க, அவள் பராக்ரமத்தைக்கண்டு மகிழும் தேவியின் இரகஷியநாமலக்ஷியார்த்தம் விளங்க, "அனுதாப சிந்தை'' யொன்றினாலேயே இந்தியாவை யாளலாமென்று கூறிய இளவரசர்தாமே பட்டத்துக்கு வந்தபின், அவர் அரசாக்ஷியதற்கு அத்தாக்ஷியாய் விளங்குவதாகு மென்பதற் கையமில்லை. அப்பொழுது இந்தியாவிலுள்ள சித்தபுருஷர்கள் தாம் நினைத்தகாரியத்தை முடித்தவர்களாய் 'பண்டபுத்ரவதோத்யுக்த பாலாவிக்ரமநந்திதாயைநம: '' வென்று தேவியை வணங்கி தேவியின் ஸாந்நித்தியம் உலகெங்கும் விளங்க விசுவேசுவரர்களாக விளங்குவார்கள். மூடர்கள் முக்காலும் மூடர்களேயாவர். அவர்களுக்கு மூடத்துவம் நீங்கினாலன்றி மனுஷத்துவமில்லையாதலால், அவர்களைப்பற்றி நாம் இங்கு சிந்திக்கவும் இடமில்லை.

ஓம்தத்சத்.



# ஸ்ரீ மங்களாம்பிகை பஞ்சரத்நமாலை.



1. மாயவலையிற் சிக்கவிட்டென்னை மண்ணில்வந்து பிறக்கவைத்தாய்
காயவலையிற் புகுந்துகொண்டு காரணமாமுன்னை மறந்துவிட்டேன்!
† தாயமான காயத்திலே தாயேவந்துநீ யுத்பவித்துப்பின்
மாயமான காயத்தையுருக்கி மண்ணிற்பிறந்ததை மறக்கவைத்தாய்!
மாயகாய தாயமாய மங்களாம்பிகே சரணமம்மா!

2. மகவென்றுன்னை வாரியெடுத்து மாரிலணைக்க வுள்மனமகிழ்ந்து
அகமகிழ்ந்துபின் ஞர்வம்நிறைந்து அன்பிற்பிறந்ததோர் மதுரமென்று
ஜகமுழுவது முன்மயமாக ஜகத்ஜ்யோதியை யுன்னிடங்கண்டுபின்
தகதகவென்றுள்ள தங்கமேனியில் தாய்முகம்விளங்கத் தாபந்தீர்த்த
மகமகக்ஷேத்திர ஜகதகஜ்யோதியாம் மங்களாம்பிகே சரணமம்மா!

3. ஐந்துவயதிலுன் தாய்தேஹங்கழிய அவளுடன் என்னுயிர் தானும்போக
ஐந்துவயதாகாப் பாலையாயிருந்துநீ யவளுக்குபதேசம் செய்வழிகாட்டி
ஐந்துவிரலாலும் அழகாய்க்கோலியுன் மழலைவாய்ப்பிறந்த "ஓம்மாச்சி
[கோவிலில்"
ஐந்துமூன்று மானவுன்தாய் புரியஷ்டகத்தைப் பிரதிஷ்டைசெய்து
மூவைந்தான வயதிலென்னைப் பிரியாமற்பிரியமனந்துணிந்த
மங்களாம்பிகே சரணமம்மா!

4. ஏழையேன்கோழை மனக்குரங்காலே யேங்கித்தவித்த போதெல்லாம்
கோழைமனமென் குடிகெடுக்காமலே குணக்குன்றாய்விளங்கியென் கலி
[தீர்த்தாய்
வாழையுங்குணதிசைப் பலனிட்டதென்று வாழைக்குப்புட்டுச் சமைத்
[திட்டாய்!
வாழைக்குப்புட்டுச் சமைத்திட்டசெல்விநீ ஏழையேன் குழந்தையைக்
[கட்டிக்காப்பாய்!
ஏழைக்குங்கோழைக்கும் வாழைக்குமிரங்கும் மங்களாம்பிகே சரணம்மா!

5. சரணமென்றுரைத் தருணத்திற்காக்கும் மங்களாம்பிகே சரணமம்மா!
சரணம்சரணமுன் பாதமேசரணம் ஜகத் அம்பிகே முக்காலும்சரணம்!
தருணம்! தருணம்! தருணமிது! தருணத்தில்வந்தென்னைக் காரம்மா!
வருணனோடருணன் வாயுவும்வணங்கும் ஜகத்காரணீ! சரணமம்மா!
சரணம்சரணமுன் கருணைக்கேயழுகிற குழந்தையைக்கைநீட்டிக்
காத்தருள்தாயே!

---

† ஆதியிலிருந்துண்டான.

## The Science and Conduct of Life.



"Nature is the great Vedantist; and in all her works—for those that have eyes to see—She is but elaborating and manifesting that mighty process which the inspired sages of the past endeavoured, as best as they could, to interpret in the language of common speech."

"All tht we have to do is to think of Nature as something living and conscious, and she at once becomes the model to which we are blindly seeking to conform. Here has been the crux of all Western philosophers; and it is this which has divorced their speculations from life. The western thinker dare not take the plunge which Eastern sages have taken with such splendid boldness. Infected by that anthropomorphism, which has crippled all Western religions, he cannot think of consciousness save in organic creatures such as animals or men". The indian sage finds reality in the total life To him all limitation is unreal and all differentiation is *maya.* And this gives us says Prof. Wodehouse, a metaphysic which is one with Nature supplying a simple formulā for her laws. It founds philosophy on an inexpungeable basis so that all scientific discoveries make it only safer and firmer. Hence it is that Vedanta, which expounds this phenomenon, is the true philosophy. "It is that simple and transparent Nature philosophy, for which the World has long yearned—the philosophy which will knit together Science and Religion and re-infuse into our common life the inspiring breaths of an ideal derived fom Nature herself, and so immortal and ever young". The Vedanta stands for a truth which tells the world that religion, philosophy and science must be eventually one—a truth which the world has been struggling for thousands of years to attain. What is needed, for the realisation of this ideal, is scientific interpretation. Prof. Wodehouse concludes with the following remarks:—" We need new commentaries to-day which shall present these ancient truths afresh in the light of modern knowledge. We need not fear that they will suffer in the process. The result will be quite the reverse. For it will make of what is now a dry and dusty tradition something young and living, replete with reference to our daily life. And it will, if ever it be undertaken, supply for India what she sadly needs to-day—namely a philosophy of the present, in touch with the awakening life of the country and with her new born hopes and aspirations instead of merely a far-off echo of a half-forgotten past. All this the Vedanta still can do; for it has in it the science of a life eternal, since it is, as I have said, the philosophy, not of the library and the lecture room, but of Nature herself. And that day will be the day of *its* resurrection when it comes to be realised as such."—Professor Wodehouse in *the 'Times of India'* and in the *'Hindustan Review.'*

" I am glad to find that you are devoting your time and talents to spiritual investigations. I wish our young friends of the rising generation will devote some portion of their time to such enquiries." *Dewan Bahadur P. Ragaratna Mudaliar.C.I.E.*

" I shall never forget the short conversation which I had with you in 1893 in Madras. I was much impressed by your energy and enthusiasm in the noble cause of making people enlightened and healthy. I note with pleasure that since 1900, you have been working in a new direction and that you are able to suppress your mind. " *Guru - Bhakta - Kesari, Dewan Bahadur A. Ramachandra Iyer, Rtired Chief - Judge,Mysore, now at Kalady.*

## ஶ்ரீவித்தையும் ஸன்மார்க்கமும்.

"நசிமசியென்று நமசியை வைத்து
நம சியோ டொன்று வகையறிவா ரில்லை
நம சியோ டொன்று வகையறி வாளர்க்கு
நமசியோ டீசன் நயந்தருளின்றானே."

ஶ்ரீவித்தை என்பது ஜீவ சத்தியின் உற்பத்தி லய விசேஷத்தை விளக்குவதாம். சக்தி யிரண்டு விதம்: பரம், அபரம்; அதாவது, ஜீவசக்தி ஜடசக்தி என இரண்டாம். ஜீவசக்தியே சிவசக்தியாம். ஜட சத்தியே பிரகிருதியென்று சொல்லப்படுவது. இவை யிரண்டும் உயிருடல் போல் சம்பந்தப்பட்டுள்ளன. உயிருக்கும் உடலுக்குமுள்ள சம்பந்தம் உள்ளபடி பார்க்கில் அத்வைதசபந்தமாம்.

"பிரகிருதியின் உண்மையில் பாமனைக்காணலாம்" என்னும் தலைப்பின்கீழ் நாம் பிரசுரித்து வந்த விஷயங்களின் உண்மையைக் கிரகித்தறிந்தோர் 'உயிருடல்' உண்மையை உள்ளபடி யறிவார். பிறகு 'ஶ்ரீவித்தையல்லது மதிவளர்வித்தை' என்னும் தலைப்பின்கீழ் பிரசுரித்துவந்த விஷயங்களின் உண்மையை உணர்ந்தோர் ஜீவசக்தியின் மஹிமையை யுள்ளபடி யுணர்வார். ஜீவசக்தி சித்சக்தியிலிருந் துற்பத்தியாகிச் சித்சக்தியிலேயே வந்தொடுங்குகிறது. ஜடசக்தி ஜீவாதாரமா யிருப்ப துண்டெதுவோ அது. இந்த ஜடசக்தியும் உண்மையாக வாராயில் சத்தாமாத்திரமான பதத்தி லிருந்து மாயா சம்பந்தத்தா லுண்டான தென்று விளங்கும். பிரகிருதி ஜடமயமானாலும், சித்தோடு கூடியே விளங்குவதால் அது அறிவின் பிரகாசம் பொருந்தியது என்பது ஸத்யம். சித், சடம், என்னு மிரண்டும் சேதனம் அசேதனமெனச் சொல்லப்படும். அதுவே அறிவு, அறியாமை என்று சொல்வதுமாம்.

அறிவு, அறியாமை யிரண்டும் ஒன்றா அல்லது இரண்டுபொருளா ? பேதபுத்தியுள்ள மனிதர்புத்திக்கு இரண்டாகத் தோன்றினாலும், உண்மையில் உள்ளபடி பார்க்கில் அவை யிரண்டும் ஒருபொருளின் இருப்பு மறைப்பே யொழிய வெவ்வேறான இரண்டு பொருளல்லவென்பது ஸ்வானுபவத்தில் நன்றாகவிளங்கும். ஒன்றையிரண்டு போல்காட்டுவது பின் எதுவென்றாலோ? அது அந்த ஒருபொருளின் இருப்பு மறைப்பு என்று முன்னமே சொன்னோம். இவை யிரண்டில் "இருப்பு" ஸ்வபாவமாயுள்ளது. "ஸத்" ரூபமாய் விளங்குவது. இதுதான் உண்மை. இந்த உண்மையை விளங்காமல் மறைப்பது ஒன்று எதுவோ அதுதான் ஆவரணம் என்று சொல்வது. ஆவரணம் என்றால் திரை அல்லது மறைப்பு என்று பொருள்படும். சிலந்திப் பூச்சியின் வயிற்றிலிருந்து நூலெப்படியுண்டாகி வலையாகவேற்பட்டதோ, பட்டுப்பூச்சியின் வயிற்றிலிருந்து நூல் எப்படியுண்டாகி பட்டுப்பூச்சியை மறைத்ததோ அப்படியே "ஸத்" ரூப உண்மையி லிருந்து அதை மறைக்குந்தன்மைய தான "இன்மை" "இல்லாமை" யுண்டாயிற்று. இதனால் இவையிரண்டும், வெவ்வேறான இரண்டு பொருளல்ல வென்றும் ஆனால் ஏகமாயுள்ள ஒரு பொருளின் பரிணாமமென்றும் ஏற்படுகிற தல்லவா !

ஒன்று இரண்டாய்ப் பரிணமித்ததுபோல உண்மை, இன்மையென்னு மிரண்டுஞ் சேர்ந்து "உண்டில்லை" யென்னு மோர் மூன்றாம் பொருளாகப் பரிணமித்தது: இப்படி இரண்டு மூன்றாக,இந்த மூன்றிலிருந்து இப்பிரபஞ்ச மெல்லாம் தோன்றுவதும், பிறகுதோன்றின விடத்தே யொடுங்குவது மாயிற்று. ஒன்றிலிருந் துண்டான இம் மூன்றையே திரிபுடி ஞானம், த்ரிகுணாத்மகம் என்றும் த்ரிபுரம் அல்லது த்ரிகரணம் அல்லது த்ரிதேஹம் என்றும் பரிணாமக் கிரமத்தில் சொல்வதுண்டு.

அறிவு ஒன்றையே பற்றிப் பார்க்கில் அது திரிபுடிஞானமாய்விளங்கும். திரிபுடி ஞானமாவது:— அறிவான், அறிபொருள், அறிவு என்பனவாம். இஃதையே யுள்ளபடி யாராய்ந்து உபாதிரஹிதமாய்ப் பார்த்தால், அறிவு, அறியாமை, அறிவறியாமையென மூவ்விதமாகப்படும். அறிவு, "ஸத்ஸ்வரூபமாக வுள்ளது." அறியாமையோ "அஸத்" மாத்திரமாயுள்ளது. அறிவறியாமை யென்பது "ஸதஸத்" ரூபமாய்விளங்குவது. இதிலெல்லாம் அறிவு ஒன்றே உண்மையானது; மற்ற விரண்டும் அதன் பிரதிபாஸமான பரிணாம பேதங்களாம்.

அப்படியே த்ரிகுணாத்மகமா யுள்ள சிவனைப் பிரித்துப் பார்க்கில் ஸத்வம், தாமஸம், ராஜஸம் என முக்குணத் தோற்ற முண்டாகும்.

ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரணமென்கிற புரங்கள் அல்லது தேஹங்கள் மூன்றும் இப்படி ஒன்றாயுள்ள காரண தேஹத்தின்(உள்ளுடம்பின்)பரிணாமபேதங்களாக விளங்கும். இவைகளையெல்லாம் பற்றி விவரமாய் ஏற்கனவே விவேகசிந்தாமணியில் ஐயக்

திரிபற விளக்கி யெழுதி யிருக்கிறோ மாதலால் பின்னு மவற்றை விரித்தெழுதவில்லை.

இவ்வளவையும் இங்கு சுருக்கமாய் எடுத்துச் சொன்னதின் காரணம் என்ன வென்றால், நிருபாதிகரும், நிர்மலரும், நித்தியமுக்தரு மாயுள்ள பரம்பொருள் ஒன்றே விவிதமான இப் பிரபஞ்சமாகத் தோன்றி எல்லாவற்றையும் ஒழுங்காய் நடத்திவருகிறதன்றி அதற்கந்நியமான வுண்மையொன்றில்லை யென்பதை வற்புறுத்துவதற்கே யென்றுணர்க.

"ஏகமேவாத்விதீய"மா யுள்ள நித்தமுத்த ஸத்தியப் பொருள் ஒன்றே சாசுவதமாயுள்ளது. அதற்கு அந்நியமாய்க் கிஞ்சித்தும் இல்லை. அந்த ஏகமான உத்தமப்பொருளை பரமசிவம் என்று ஸௌகரியார்த்தம் பேரிட்டழைப்போம். அந்தப் பரமசிவத்துக்கு லய, போக, அதிகார பேதங்களால் உபாதிபேதம் உண்டாகிறது. அந்த உபாதிக்கு இருப்பிடம் அதுவேயன்றி வேறல்ல. ஆயினும், அது பட்டுப்பூச்சி போலும், சிலந்திப் பூச்சிபோலும், தன்னிடத்திலுண்டான உபாதியில் தான் சிக்கிக்கொண்டது போல் பார்வைக்குமட்டும் தோற்றமாய் விளங்கி, உண்மையில் அந்த உபாதியைத் தரித்ததாய் அதில் வியாபித்து நிற்கிறது.

இப்படி யேகமாயுள்ள இரண்டற்ற பரம்பொருள் லயமடைந்திடுங் காலத்தில் அதாவது பரிணாமதசைவிட்டு ஒய்ந்துட்கார்ந்து இளைப்பாறுங் காலத்தில் அதற்கு உபாதியாக விருப்பது பிந்துவென்றும் குண்டலிநி யென்றும்சொல்லப்படுகிறது. இந்தக் குண்டலிநி சத்தியென்னும் சுத்தமாயையானது அதன் காரணமாகிய பரசிவத்தில் ஒடுங்கும்போது "ஏகமேவாத்விதீயமான" ஒரேபொருள்தான் உண்டு. அதை உண்மையில் உள்ளப்டி ஸ்வானுபவத்தில் அனுபவித்தறியலா மானாலும், வாக்குக்கும், மனதுக்கும் எழுத்துக்கு மெட்டாத அதைப்பற்றி ஒன்றும் சொல்ல இயலாது. அந்த ஏகமான பொருளுக்கு சுத்தமாயை யென்று சொல்லும் குண்டலிநி சக்தி மாத்திரம் உபாதியா யிருக்கும் பொழுது அது இளைப்பாறும் தன்மையில் ஸ்வயம்பிரகாசமாய் விளங்கும். இதற்கு லயசிவம் அல்லது "God at Rest" என்றுபேர். இப்படி இளைப்பாறுதல் விட்டு, மெய்யன்பர் தம்மை வழிபா டெய்தும் பொருட்டு சகள வுருவந்தாங்கி போகாங்கமூர்த்தியாய் விளங்கும்பொழுது அவர் ஆதிகலாரூபியும், குண்டலிநியின் பிராணபந்த ஸ்வரூபையுமான மனோன்மனி சக்தியாம். "சதாசிவகுடும்பினி" யோடு நைஷ்கர்மசித்தராய் போகானுபவங்களைப் புசிக்கும் வழிகாட்டிச் சகள மூர்த்தமாய் விளங்குகிறார். இவருக்குப் போகசிவம் அல்லது ஸதாசிவம் என்று பேர்.



பிறகு அதிகார பேதமுண்டாகும்போது மாயா ஸம்பந்நராய் சலந சக்தியோடுகூடி பஞ்சகிருத்தியங்களு மியற்றியருளி, சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹார திரோபவானுக்ரகங்கள் புரிந்து "அதிகாரசிவம்' என்னும் பேரோடு உமாமஹேசுவரராய் விளங்குகிறார்.

ஒன்றுயுள்ள பரம்பொருளின் லய, போக, அதிகார பேதங்கள் உபாதி பேதத்தால் உண்டாவதை யுள்ளபடி யறிந்தவர்கள் இகபர சாதனங்களை யெல்லாம் சாதிக்கவல்ல சாத்தியபுருஷராவர்.

அப்பியாஸ புருஷர்களில் சாதகர் சாத்தியர் என இருவகையாயினருளர். சாதகவழி யறிந்து சாதனை புரிந் தப்பியாசிப்பவர்கள் 'சாதகபுருஷர்கள்' என்னும் அப்பியாஸயோகிகளாம்.

சாதனைகொண்டு சாதித்துத் தேறினவர்கள் சாத்திய புருஷர்கள் என்னும் ஸித்தயோகிகளாம்.

முன் சொன்ன அப்பியாச யோகிகள் முக்தி வழியில் முனைந்து நிற்பவர்க ளாவார்.

பின்சொன்ன சித்தயோகிகளோ, "முழுதும் வழியறிந்து, முழுவழியுந் தானடந்து" தேறினவர்களானபடியால், அவர்கள் 'முக்தி யென்னப்படும் மங்கையைச்சேர்ந்து" முயங்கி, "சக்தி யென்னப்படு மீசனருள்பெற்று"ப் பேரானந்தத்தில் மூழ்கி உலகுய்ய வேண்டி அதிகார சிவத்துக் கடிமையா யிருந்துழைத்து, போகசிவத்தோடு பேரானந்தம் புசித்து, லயசிவந் தன்னிலிருந் திளைப்பாறி, "சித்தன்போக்கு சிவன் போக்கு" என்றபடி கடவுளின் கிரியா லீலைகளையே லளிதா பக்தராயிருந்து விளையாடுவர்.

மேலே சொன்ன மர்மங்களை யுள்ளூற் றறிதலே ஸ்ரீவித்தையாம். உள்ளூற்றறிந்து ஸ்வானுபவத்தா லுணர்ந்ததை யுள்ளபடியே சகஜானுபவத்துக்குக் கொண்டுவந்து அந்த அனுபவம் நிலைகுலையாதிருந் தொழுகுவதே ஸன்மார்க்கமாம். மற்றதெல்லாம் துன்மார்க்கமே.

இந்தக் கருத்தையே இங்கிலீஷில் ஒருவிதமாய்க் கிரஹித்த ப்ரோபெஸ்ஸர் வூட்ஹவுஸ் என்பவர் "உண்மை வேதாந்தம்" என்னும் தலைப்

பின்கீழ் முதலில் 'டைம்ஸ் ஆப் இந்தியா' என்னும் பத்திரிகையிலும், பின்னர் "ஹிந்துஸ்தான் ரிவியூ" என்னும்" மாதாந்தப் பத்திரிகையிலும் இங்லீஷ் படித்தவர்கள் புத்திக்கு விளங்கும்படி தெள்ளிதாய் விளங்க ஒரு வியாஸம் எழுதி யிருக்கிறார். அதில் முக்கியமான ஒரு பாகத்தை இதன் முகட்டில் எடுத்து அச்சிட்டிருக்கிறோம். அதிலிருந்து, வேதாந்தம் என்றால் "வெட்டிப் பேச்சல்ல', ஆனால் இகபர மிரண்டையும் ஒன்றாகப் பொருந்தப் பொருத்தும் ஓர் உண்மையான மஹாவித்தை யென்று ஆங்கிலேயரும் அறிந்துகொள்ளத் தலைப்பட்டிருக்கிறார்கள் என்பதை நம்மவர்கள் அறிவார்களாயின், அவர் எழுதியதும் நாம் எழுதியதும் வீண்போகாதென்பது திண்ணம். நம்மவர்களில் வயது முதிர்ந்த பெரியவர்களும் ஆத்ம விசாரம் செய்யவேண்டியதின் முக்கியத்தைப்பற்றி விழித்துக் கொண்டவர்களாய் நம்மில் வாலிபராயுள்ளோர் ஆத்மவிசாரம்செய்து நல்வழிக்கு வந்து இத்தேசத்தின் பேரும் கீர்த்தியும் முன்போல் பிரகாசிக்கச் செய்ய வேண்டுமென்று அவாவுற்றிருக்கிறார்களென்பது திவான் பஹதூர் ப. இராஜரத்ன முதலியா ரவர்கள் நமக்கெழுதி யிருக்கும் கடிதத்திலடங்கிய சிலவாக்கியங்களை யச்சிட்டிருப்பதிலிருந்து விளங்கும். குருபக்த கேசரியான திவான் பஹதூர் அ. இராமச் சந்திரய்யர் அவர்களும் மனதையடக்குவதே எல்லாவற்றிலும் சிலாக்கியமென்று எழுதியிருப்பதையும் அச்சிட் டிருக்கிறோம். இவர்களைவிட அதிகமாய் நாம் சொல்லவேண்டியது ஒன்றுமில்லை.

"எல்லாம் சரிதான்! இதை யெல்லாம் யார் கண்டார்கள்!" என்று கேட்கும் நவநாகரிகப் புஞ்சங்களுக்கு நாம் ஏதும் பதில் சொல்ல ஆற்றாதவராகவிருக்கிறோம், ஆனால் உண்மையில் உள்ளபடி "ஐயோ! இதை யெல்லாம் அறிய வகையில்லையே!" என்று உளம்விண்டு பரிதாபிப்போருக்கு ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறோம். அஃதாவது:—

"அப்பா நீ அப்படி அங்கலாய்க்காதே! மஹாரிஷிகளும் தபஸிகளும் நிறைந்த வேதபூமியாம் இந்தப் பாதகண்டத்தில் கடவுளை வழிபடக், கண்ட விடமெல்லாம் சாதனங்கள் நிறைந் திருக்கின்றன. ஔவையார் "கோயிலில்லா வூரில் குடியிருக்க வேண்டாம்" என்று கூறினாள்: அவள் வாக்குக் குன்றாதபடி நம்முன்னோர்களும் இவ்விந்தியாவின் ஒவ்வொரு பாகத்திலும் க்ஷேத்திரமென்றும், தீர்த்தமென்றும், மூர்த்தமென்றும் ஸ்தல மஹிமை, தீர்த்த மஹிமை, மூர்த்தி மஹிமை பொருந்திய விடங்களிலெல்லாம் கோயில்கட்டி கும்பாபிஷேகம் செய்து நித்தியமான சாதனங்களை மந்திர தந்திர யந்திரங்கள் மூலியமாக, செலவைச் செலவென்று பாராமல் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். அவைகளின் கருத்தை கவனித்தறியாத குறையன்றி வேறொன்றுமில்லை."

"மந்திரமாவதும் மாமருந்தாவதும்
தந்திரமாவதும் தானங்களாவதும்
யந்திரமாவதும் தூய்நெறியாவதும்
எந்தைபிரான்தன் இணையடி தானே."

—திருமந்திரம்.

## Easy Lessons in Economics.

### குடிவாழ்க்கை.

### பாடம் - 2. செல்வம்.

"முயற்சி திருவினையாக்கும்."

(முன்தொடர்ச்சி).

(*Specially written for the Vivekachinthamani.*)

செல்வம் என்ற பதத்திற்கு அர்த்தமே 'சென்றுக்கொண் டிருப்போம்' என்று ஏற்படுவதால் அது நிலைத்து நிற்பதல்ல வென்று ஏற்படுகிறது.

தெண்ணமுத மனையகல் விப்பொருள் படைத்திடிற்
றேச மெல்லாந் துதிக்குஞ்
செயத்தம்ப மானபுகழ் நிலைநிற்கு மிவையெலாஞ்
செம்பொன் மிகு செல்வமதுபோல்
வெள்ளமது கொளுமெனும் பயமில்லை கனலினால்
வெம்பமரு சலனமில்லை
வேந்தர்கள் பறித்திடக் கூடாது சோதரர்
விரும்பினும் பங்கு றாது
கள்ளராற் றிருடவும் முடியாது வரவரக்
கனமலாற் குறைவு றாது
கருணைஞா னந்தழையு மாகையா லுனையிதய
கமலத்தில் வைப்ப தெளிதாம்.

என்ற சதகப்படி, கல்வியையே சிறந்த பொருளென மதித்து அதை யடைந்தவர்களும், பிறகு திரவிய அபேக்ஷை மேலிட்டவர்களாய், வேண்டிய அளவு சம்பாதித்துப் பூமியில் புதைத்துவைக்கவும் மனமில்லாதவர்க

ளாய், கூட்டுவர்த்தக கம்பெனிகள் அடிக்கடி விழுந்து போவதால் அப்பேர்க்கொத்த கம்பெனிகளில் போடவும் துணியாதவர்களாய் நிலத்திற் போடுவதே நலமெனத் துணிந்து தாங்கள் தேடிய தனத்தைக்கொண்டு பூமிகள் வாங்குவது சர்வ சாதாரணமாயிருக்கிறது.

ஒருவன் பலவிதமான சட்டங்களை முன்னிட்டு தனமே தன் சுகசௌக்கியங்களுக்கு முக்கிய ஆதாரமெனக்கொண்டு ஒன்பதுகோடி ரூபாய் பெறுமான சொத்துக்களைச் சம்பாதித்து, அதில் பெரும்பாகத்தைப் பூமியில் புதைத்துவைத்து மற்றதைக்கொண்டு தனக்கு வேண்டிய விஷயங்களில் செலவிட்டு வந்ததன்றி ஒரு தாசியையும் வைப்பாக வைத்துக்கொண்டிருந்தான். கையிலிருந்த தொகையெல்லாம் செலவானபிறகு, பூமி, வீடு, முதலிய ஸ்தாவரசொத்துக்களையும் விற்றுத் தாசிக்குக் கொடுத்தான். பிறகு கையில் ஒன்றுமில்லாமற் போகவே, பூமியில் வெகுகாலத்திற்கு முன் புதைத்துவைத்த திரவியத்தை எடுக்க எண்ணங்கொண்டு ஒருநாள் இரவில் பூமியைத் தோண்டினான். அப்பொழுது திடீரென்று தனது மனதிற்கிசைந்த மாதாகிய தாசியைவிட ஆயிரமடங்கு மேலான இலக்ஷணங்களோடு கூடிய ஓர் திவ்யஸ்திரீ அவ்வேசிகாந்தன் கண்ணிற்குத் தோன்றி, 'ஏ உத்தமனே! இது நீ கஷ்டப்பட்டுத்தேடிய பொருளென்பதில் சந்தேகமில்லை. உன் கையாலேயே இது செலவழிக்கப்படல் வேண்டும். ஆனால் சிறிது காலத்திற்குமுன் நீ என்னை நம்பி இப்பொருளை ஒப்பிவைத்தாய். நான் அதில் ஒரு தூசிகூட எடுத்துக்கொள்ளாமல் நாளதுவரை காப்பாற்றி வைத்திருக்கிறேன்.

நீ இப்பொழுதோ என்னைவிட அதிக நம்பிக்கையும் விசுவாசமு முள்ளவ ளென்பதாக வேறொருஸ்திரீயினிடத்தில்இந்தத்திரவியத்தை ஒப்பிவைக்கப் போகிறாய். அவள் சீக்கிரத்தில் என்னையே உன்வாயிலும் தலையிலும் போடுவாளென்பதில் சந்தேகம் வேண்டாம்,' என்று பூமிதேவியாகத்தோன்றிய ஸ்திரீரூபம் கூறி மறையவே, இவன் சிந்தனை செய்து தெளிவடைந்து தாசியுறவைத்துறந்து, தானதர்மங்களைச்செய்து வெகு நாள் வாழ்ந்ததாக ஒருகதையுண்டு.

அக்காலத்தில் பூமியில் புதைத்து வைப்பது சிரேஷ்டமானதென்று கருதப் பட்டது போய் பிற்காலத்தில் பூமிகள் வாங்குவது மேலானதென்று எண்ணப்பட்டது. அது முயற்சியின்றி பெரும்பயனைக் கொடுப்பதில்லையென்று கண்டவர்களும், மேற்கத்திய நாகரிகத்தில் பயின்று அவர்களுடைய போதனைகளாகிய "நகைகளில் பணத்தைப்போட்டும், கல்யாணங்களில் ஏராளமான செலவு செய்தும் வீணாக்காதே" என்பது போன்ற வார்த்தைகளில் நம்பிக்கைவைத்து, கம்பெனிகளில் போட்டுக்கொண்டு வந்தார்கள். அவைகளும் இப்பொழுது அவ்வளவுசாரமுள்ளவைகளென்று எண்ணுவது தொலைந்து நிலத்தினுரிமையே மேலானதென்றும் எண்ணுகின்றார்கள்.

நம்முடைய முயற்சியாலமையும் பொருள்களை நம் மிஷ்டப்படி செலவு செய்வது கிரமமாயினும், நம்முடைய முயற்சியின்றியே இயற்கையாயுள்ள நிலத்தை சிலர் 'என்னுடையது, என்னுடையது' என்று பாத்தியம்பாராட்டுவதும் நியாயந்தானென்றே சட்டங்கள் ஏற்பட்டும், நம்மை ஆள்வோர் அவ்வித பாத்தியதையை அங்கீகரிப்பதும் நியாயமானதாகவே தோற்றுகிறது. ஏனென்றால் நிலமானது, ஒரு தொழில்செய்து இலாபம் சம்பாதிப்பதற்குக் கைமுதல் எப்படி அவசியமோ, அப்படியே பயிர் செய்து இலாபம்பெறுவதற்கு ஏற்ற கைமுதலாகிய சொத்தா யிருக்கிறது. நிலம் ஈசனது சிருஷ்டிதான். அதையுண்டாக்கியவன் மனிதனல்ல. ஒருதேசத்திலுள்ள ஜனங்களனைவருக்கும் அதில் சமமான பாத்தியமிருப்பதாகவைத்துக்கொண்டாலும், பூமியானது சிருஷ்டித்த ஸ்திதியிலேயே யிருந்தால்

உபயோகமில்லையன்றோ? அதைத் திருத்தி விளையும்படி செய்தல் மனிதனுடைய செயலேயாகும். இவ்விதம் திருத்தியதை விளைநிலமாக்கியவர்களுக்கு அது ஒருதனமாகிறது. அவர்களும், அவர்கள் வம்சத்தாரும் அதைத் தங்களுக்குரிய செல்வமாய் அனுபவித்தல் நியாயந்தான். மேலும் ஒருவன் ஒரு பூமியை அநியாயமாய்க் கைப்பற்றி, அவனும் அவனுடைய சந்ததியாரும் நெடுங்காலமாய் அனுபவித்து வருவாராயின், ஆதியிலவன் அதை அநியாயமாய்க் கைப்பற்றியதைக்கொண்டு, இப்பொழுது அதை அவன் வம்சத்தினரிடத்திருந்து விலக்குதல் சாத்தியமாகாது. காலத்தினால் அநியாயமும் நியாயமாகலாம். சென்ற காலத்தின் அநீதிகளை இப்பொழுது மாற்ற ஆரம்பித்தால், ஒவ்வொன்றும் மாற்றவேண்டியதாகும். ஆகையாலன்றோ நம்மையாள்வோரும் அனுபோகமே உரிமைக்குச்சிறந்த சாதனமென்று மதிக்கிறார்கள்!

கஷ்டப்பட்டு செல்வத்தைத்தேடியவன் தனம் அவனிஷ்டப்படி செலவிடப்படுவது நியாயமாகையால், தனமுள்ளவரைப்பார்த்து பொறாமைப்படுவதில் பிரயோஜனமில்லை. தனமுடையவனை முயற்சியுடையவனென்றே கருதவேண்டும். அவனால் அவனுடைய வம்சத்தில் ஜனிப்பவரும் சுகிக்க இடமுண்டாகும். முயற்சி யில்லாதவர்கள் தாங்கள்வருந்துவதுடன் தங்களைச்சேர்ந்தவர்களுக்கும் பயன்படார். முயற்சியுள்ளவர்களோ தங்கள் முயற்சியால் தானே தனமுள்ளவர்களாவார்கள். அப்படியென்றால், முயற்சியே தனமுமாகும். 'முயற்சி திருவினையாக்கும்' என்றதன் உண்மை செல்வநூலின் முக்கிய தத்துவங்களில் ஒன்று.

T. C. வெங்கடரமணய்யர்.



## YOGACHANDRIKA—THE ALLEGORY OF TARA AND CHANDRA.



## யோகசந்திரிகை.

### "தாரை சந்திரனோடு போனாள்" என்பதின் தத்துவார்த்தம்.

### வசந்த பௌர்ணமி விசேஷம்.

"அமாவாசை பூரணையாகுமவர்க்குச்
சமனுமுயிருடம் புதான்."—ஔவைகுறள்.

"வைகாசி மாசம் சிரேஷ்டமான மாசம். அதில் பௌரணை மிகச் சிரேஷ்டமானது. அது ஞானிகளுக்கு முக்கியதினம்." என்று பூரணசந்திரோதயம் பத்திராசிரியர் அப்பத்திரிகையின் முதலெடுப்பில் எழுதியிருக்கிறார். "அவ்வுயர்நலமமைந்த தினத்தைமுன்னிட்டு இப்பத்திரிகை வெளிவருதலின் இதற்குப் பூரண சந்திரோதயம் என்று நாமகரணம் செய்திருக்கிறது" என்று அவர் வசந்தபௌர்ணமியை முன்னிட்டுத் தம் பத்திரிகைக்குப் பேர்புனைந்ததைப்பற்றிச் சொல்கிறார். இதை வாசிக்கவும் நமக்குப் பழைய ஞாபகங்களும் அனுபவங்களும் உள்ளத்துவகையோடெழுந்து உளம்பூரிக்கவும், மனம்பூரிக்கிறது. ஜாக்ரத்தில் நம் கண் முன்னே புருவமத்திக்கெதிரே கையால் எட்டிப்பறிக்கும்படியான தூரத்தில் பூர்ணசந்திரோதயம் உண்டாகிப், பால்போலும் முத்துப்போலும் அமிர்தகலை யொழுகும் பூர்ணசந்திரமண்டலமானது பிந்து தத்துவத்தில் தோன்றி அரைமாத்ரை யளவுகாலம் இருந்து எழுபத்தியீராயிரம் நாடிகளையும் நனைத்து தேஹம் புளகாங்கிக்கச் செய்தது. ஆகவே 'ஜாக்ரத்தில்' என்று சொன்னதைத் "துரியஜாக்ரம்" என்று கொள்ளல்வேண்டும்.

எல்லாமாசங்களிலும் மார்கழிமாசம் சிரேஷ்டமானதென்று பகவான் கீதையில் சொல்லியிருக்க, வைகாசிமாசம் 'சிரேஷ்டமானமாசம்' என்றது எப்படி? மார்கழிமாசத்தில் ஜீவகோடிகளிடத்தும் பகவானுக்கு அருள் சுரப்பதால்

தனுர்மாசத்துப் பௌர்ணமை சேர்ந்த ஆருத்ரா நாள் "மஹாசிரேஷ்டம்" பொருந்தியது என்பதிற் சந்தேகமில்லை. "தன்னந்தனியாய்த் தனுவற்ற தேஹியாய் (அசரீரியாய்) இருந்த பகவானுக்கு ஜீவகோடிகளிடத்திற் கருணையுண்டாகுங் காலமே எல்லாக்காலத்திலும் சிரேஷ்டமான காலம். ஸௌரமான, சந்த்ரமான வருஷங்களிரண்டிலும் தனுர்மீ பௌர்ணமிகூடிய ஆருத்ராநாள் மார்கழிமாசத்தில் நேர்வதால், அதுவே மாசங்களிலெல்லாம் சிரேஷ்டமானது. ஆனால் அது உலகத்துக்கு "சூன்யமாசம்." உலகுக்குச் சூன்யம், பகவானுக்குப் பூர்ணமாதலால் அதனால் அம்மாதத்தின் சிரேஷ்டத்துக்குக் குறைவொன்றுமில்லை. அப்படியானால் வைகாசிமாசத்தை சிரேஷ்டம் என்று சொன்னது எப்படியெனில், வைகாசிமீ வசந்தருதுபூரணமாய் விளங்கும் காலம். வசந்தருதுவில் சிருஷ்டி பூரணமாய்ப் பயிர்பச்சைகளெல்லாம் தோன்றிப்பூத்துக்காய்த்துப் பழுத்து எங்கும் பச்சென்று இருக்கப் பிரகிருதி பலவர்ணங்களோடு கூடி ஸுவர்ணமாய் விளங்கும் காலம்.

"ஓங்காரியென்பாளவளொரு பெண்பிள்ளை
நீங்காத பச்சை நிறத்தையுடையவள்
ஆங்காரியாயே ஐவரைப்பெற்றிட்டு
றீங்காரத்துள்ளே யினிதிருந்தாளே."

என்பது திருமந்திரோபதேசம். மார்கழிமீ ஆருத்ரா தினத்தில் லோகரக்ஷணார்த்தம் தோன்றிய பகவானுடைய, இச்சாரூப "இன்னருட்சக்தி" யானது அறுகுண பூரணமாய் ஷடாக்ஷரரூபியாய் எங்கும் நிறைந்து ஏகமாய் விளங்குவது வைகாசிமாசத்திலேயாம். ஆனி மாசம்பிறந்ததும் ஆனித்திருமஞ்சனத்தன்று பகவான் மிதுனபௌர்ணமையில் திருமஞ்சன நீராடி, அழுக்காறொழித்துத் திருப்பள்ளி கொள்ளப்போவார்.

ஆதலால் பகவானும் தேவியும்பூரணமாய் விளங்கும் பருவமாம் வசந்தகாலத்திற் சிரேஷ்டமானது வைகாசிமீ வைகாசியிற் சிரேஷ்டம் பருவகாலமான வசந்தபௌர்ணமை. மேலும் புரட்டாசிமீ நவராத்திரியின்போது துஷ்டநிக்ரகஞ்செய்து விஜயதசமியில் வித்யாரம்பம் செய்த தேவி நவாத்மக ரூபியாதலால், புரட்டாசிக்கு ஒன்பதாவது மாசமான வைகாசியில் பருவத்தால் பூரணத்துவமடைந்திருப்பள். ஞானிகள் யோகசாதனங்களை யனுஷ்டித்து உண்மையறியச்செய்தபிரயத்தனங்களெல்லாம் வைகாசியில்தான் பலனைக்கொடுக்கும். "உடன்மே லுயிர்வந் தோன்றுவ தியல்பே" யென்பதின் உண்மையை உணரப் பூரணமான பக்குவகாலம் வசந்தபௌரணையே. புரட்டாசி அமாவாசையில் சூன்யதரிசனம் செய்துகொண்டு நவராத்ரி விரத மிருந்து மஹாநவமியில் தேவியைப் பூஜித்து விஜயதசமியில் வித்யாரம்பம் செய்த யோகி வசந்த பௌர்ணமியன்று யோகசந்திரனைத் தரிசித்து "அமாவாசை பூரணையாகும்" படியான யோகசித்தி பெற்றால் "அவர்க்குச் சமனும் உயிருடம்புதான்." "உடலோடுயிர்வந் தொன்றுவது" இயல்பே பிராகிருததர்ம ஸ்வரூபமேயாம். அஃதேபோல், "உயிரோடுடல் சென்றொன்றுவது" இருளே - அஞ்ஞானாந்தகார ஸ்வரூபமான அவித்யா லக்ஷணமேயாம் "மாயை." 'அமாவாசை' யான 'இருள்' யோக 'பூரணை'யான "அருள்" 'ஆகுமவர்க்குச் சமனும் உயிருடம்புதான்.' "பிரகிருதி பூரணம்" "பிரகிருதி ஜீரணம்" எனப் பிரகிருதியானது வியக்தாவ்யக்தஸ்வரூபமாய் விளங்கும். வசந்த பௌரணையில் "பிரகிருதி பூரணமான" வியக்த ஸ்வரூபம் விளங்கும். "பிரகிருதி ஜீரணமான" புரட்டாசி அமாவாசைக்குப்பின் தேவியானவள் அசுரர்களையெல்லாம் வதைத்து ஸ்ரீ வித்யையை ஸ்தாபித்துப் பின்னும் பிரகிருதி விளங்கச் செய்வாள். அவ்யக்தமான இருள் நீங்கி வ்யக்தமான அருள் தோன்றும் நாளே ஆருத்ரா நாள்.

மைசூர் இராஜ்யத்திலுள்ள நஞ்சங்கோட்டில் சித்ராபௌரணையன்று நந்தியருள்பெற்று

நஞ்சுண்டேசுவரரைத் தரிசித்துக்கொண்டு, அம்பாள் தரிசனத்துக்கு அவசர அவசரமாய்ப் போனபொழுது, தேவிக்கு அபிஷேகமாகி அலங்காரமாய்க் கொண்டிருந்த படியால், அவள் தரிசனங்கிடைப்பது துர்லபமாயிருந்தது. தரிசனத்துக்குப்போனவர்கள் உடனே அன்று இராத்திரி ரயிலில் பச்சிமவாஹினிக்குத்திரும்பிவரவேண்டியவர்களாயிருந்தபடியால் எல்லாரும் மானசிகதரிசனம் செய்து கொண்டு திரும்புவதாகச்சொன்னவார்த்தை அக்கோஷ்டியைச் சேர்ந்த பலருக்கு ஒவ்வாததாயிருந்ததனால், அர்ச்சகரை ஆச்ரயித்து, தேவி தரிசனம் அவசரமாய் வந்தவர்களுக்கு அந்தரங்கமாயாவது அளிக்கவேண்டுமென்றுகேட்டுக் கொள்ள, அவர் ஒற்றைக்கதவைத்திறந்து தேவியின் திருமுகமண்டலங்காணத் தரிசனமளித்தார். அப்பொழுது பார்வதிதேவியாரான அம்பாள் தமிழ்தேசத்தார் வழக்கப்படி 'கொசாம்,மடிசார்' வைத்துப்புடைவையுடுத்து நின்ற கோலத்தைக்கண்ணுற்ற பாலாத்மகமான தோழியொருத்தி "அப்பா, தேவி உங்கள் ஜாதியாரைப்போல் புடைவையணிந்திருக்கும் கோலத்தைப்பார்" என்று காட்ட, தேவியின் திருமுகமண்டலத்தைக்காண அவாவுற்றுத்தயங்கித்தவித்துக்கொண்டிருந்த திவ்யோபாஸகன், தேவியை ஸஜாதியமாய்த் தரிசிக்கவுடனேபளிச்சென்று பூர்ணசந்திரோதயமானதுபோல்தேவியின் முகமண்டலம்பாலொழுகப் பளிங்கேபோல் அவன் கண்ணெதிரே த்ரிவேணிசங்கமமென்று சொல்லும் திரிகூட ஸ்தானமாம் புருவமத்திஸ்தானத்திலிருந்து தோன்றியது. இப்படி ஜோதிர்லிங்கமாய்த் தோன்றிய திருமுகமண்டலத்தைப்பார்த்து ப்ரேமைதலைக்கேறிப் பிரிவாற்றாமையால் ஸந்நிதானத்தை விட்டு வரமாட்டேனென்று நின்ற உன்மத்தனை மற்றோர்கெடுபிடிசெய்து தடபிடலியற்றி அழைத்து வந்து விட்டார்கள். நஞ்சங்கோட்டில் தேவிஸந்நிதானத்தில் கண்ட அப்பார்வதி தேவியாரின் திருமுக மண்டலத்தையே தியானம் செய்து கொண்டு ஏகாக்ரசித்தனாயிருந்த உபாஸகனுக்கு உபாஸ்யையான தேவி அடுத்த வைகாசி பௌரணையன்று முதலில் முன்போல் பாலொழுகும்தன் திருமுகம் விளங்கத்தரிசனமளிக்க, வரவரத்திருமுகமண்டலம் சந்திரமண்டலமாக மாறிற்று. கையால் எட்டிப்பிடிக்கும் தூரத்தில் சந்திரகலை நிறைந்து பதினைந்து கலைகளாலும் பூரணமான வசந்த பூரணசந்திரன் பதினாறாவது கலையும் சேர்ந்ததனால் நித்தியபூரணனாய் நிர்மலஸ்வரூபந்தரித்துத் தன்னுளிருந்த களங்கமும் நீங்க அமிர்தவர்ஷம் பொழிந்துகொண்டு ஆத்மபூரணமாய்நின்றான். மனஸ்தத்துவத்துக்கு அதிபதியும் அதிஷ்டான தேவதையுமான இந்த வசந்த பூரணசந்திரனைப் பதினாறு கலைகளோடு கூடினவனாக யோகிகள் தவமிருந்து தரிசிப்பார்கள்.

புருஷ சூக்தத்தில் உபதேசிக்கப் பட்ட "சந்திரமா மநஸோஜாதஃ" என்னும் சந்திரனும் பதினாறுகலைகளோடு கூடிய இந்தப்பூரணசந்திரனே. பௌரணைச்சந்திரனுக்குத் தேய்ந்து வளருவதானகலைகள் பதினைந்தேயுண்டு. பதினாறாவதான "ஸாதாக்கியம்" எப்போதும் பரமசிவத்தின் ஜடாமுடியில் நித்தியவாஸமாயிருப்பது. கங்காதேவியோடு கூடியிருப்பதால் அமிர்தகலை யென்றும் பேர். இந்த நித்தியமான குறைவு நிறைவற்ற ஸாதாக்கியகலையினால் தான் சந்திரனுக்கு அமிர்தத்துவம் சித்தித்தது. நித்தியவாழ்வெய்திய சந்திரன் பிரஹஸ்பதியின் சிஷ்யனாயிருந்தது 15 - கலைகள் மாத்திரமுள்ளவனாயிருந்த காலத்தில். பதினாறாவதுகலையாம் தனது நித்திய கலையையறிந்து அஃதோடைக்கியம் பெறவும் அவன் தனது மித்தியாதேகமான தேய்பிறை வளர்பிறைபதினைந்தையும் தானல்லவென்று தள்ளி அவைகளின் வளர்வுதேய்வுகளில் அபிமானமற்றவனாய் சிவஸாதாக்கியமேதானென்றுணர்ந்து அனுபவித்திருந்தான். கேவலம் கர்மயோகியான பிரஹஸ்பதியின் பத்நியான புத்திதத்துவ

'யோகசக்தியாம்" தாரை நைஷ்கர்மஸித்திபெற்றவளாகையால், கர்மயோகத்திலும் தியான யோகம் பெரிதென்று மதித்து, கர்மயோகியான தன்புருஷன் கூட்டுறவைவிட்டு, தியான யோகியாய் அமிர்தபானம் செய்து கொண்டு அமிர்தவர்ஷம் பொழியும் ஸாதாக்கிய கலையில் நித்திய யோகியாயிருந்த யோகசந்திரனைப் பூர்வத்தில் தன் பார்த்தாவிடம் சிஷனாயிருந்ததால், தனக்கு ஆத்மபுத்திரனாக வேண்டுமென்கிற ஐதிகபாவத்தைமறந்து, உண்மைச்சுகத்தில் (பரசுகத்தில்) உண்டான உள்ளாவல் பற்றியிழுக்க, அவனிடம் யோகாப்பியாஸம் செய்யக் கருதி அவனை நாடிச்சென்றாள். "பிரஹஸ்பதி" தான் தேவகுருவானதால் கர்மத்தைத் திரஸ்கரித்தல் தன் தொழிலுக்கு ஒவ்வாதென்று சந்திரனிடத்திற் சென்று தனது பத்னியை (புத்தி தத்துவமாம் யோகசக்தியை)க் கர்ம யோகத்தாலே யீடேற்றுவான் தெய்வீகாங்கார புருஷனான தன்னிடம் ஒப்புவிக்கும்படிக் கேட்டார். சந்திரன் பூர்வத்தில் சாதக புருஷனா யிருந்தகாலத்தில் பிரஹஸ்பதி யிடம் சிஷ்யனாயிருந்தவனாயினும் தியான யோகத்தில் சித்தி பெற்றவனானதின் நிமித்தம் சாதகர்க்குரிய சிக்ஷாவிதி தீக்ஷாவிதிகளெல்லாம் கடந்தவனாதலால், பரசுகத்தைத் தேடும் பரமயோகிகளை "யாராலும் தடுக்க வொண்ணாது" என்னும் ஸநாதந விதியை யனுசரித்து தியானயோகத்திற் பழகி வரும் தாரையை (புத்தி தத்துவயோக சக்தியை) பலாத்காரமாய்த் தான் தெய்விகாங்காரத்திற் றிருப்புவது கூடாதென்று தனது தீக்ஷா குருவான பிர்ஹஸ்பதிக்கு பதிலளித்தான். தியானயோக முதிர்வில் "கருத்தரித்து" அதாவது, "சித்தவிருத்தி நிரோதன முற்றும் சித்திக்கப் பெற்று" சாதக மெல்லாம் சாத்தியமாகி யோகசித்தி பெற்றபின் பூர்வாச்ரமத்துக்குச் சென்று பிரஹஸ்பதி ஸ்தானத்திலிருந்து பூரணமான ஸூக்ஷ்ம புத்திரனை புத்தி தத்துவமாம் புதனைப் பெற்றாள். ஸ்வாதிஷ்டானத்துக்கும், விசுத்திக்கும் எப்போதும் தாய்க்கும் மகனுக்குமுள்ள வாஞ்சைரூப ஆகர்ஷண சக்தியுண்டு. அது பூரணசந்திரனுடைய ஸ்தானமான பிந்து தத்துவத்துக்கும் போக தாரக ஸ்தானமான குருபீட ஸ்வாதிஷ்டானத்துக்கும் இடையே புத்திதத்துவத்தை ஆச்ரயித்து கண்டஸ்தானத்திலிருக்கிறது. இப்படியாக, கர்மயோகத்தை யனுசரித்து நைஷ்கர்ம சித்தி பெறுவதிலும், தியானயோகத்தால் யோகசித்தி பெறுவது சுலபமும் சுகிர்தமுமென்றுணர்ந்த தாரையானவள் தன் பார்த்தாவும், அதனால் தனக்கு குருவுமான பிரஹஸ்பதி யானவர் "தேவகுரு" வா யிருந்ததினால் கர்ம யோகத்தை ஆச்ரயித்தவரா யிருப்பதுணர்ந்து அவருடைய சிஷ்யனான சந்திரன் தியானயோகத்தால் அமிர்தகலையுண்டு அமிர்தவர்ஷம் பொழிந்துகொண்டிருப்பதைக் கண்டு, தான், ஸ்திரீ ஜாதியும் அமிர்தாம்சையுமானதால், தனக்குகந்ததும் இயன்றதுமான தியான யோகத்தைச் சந்திரனையடுத்து ஆச்ரயித்து யோகசித்தி பெற்றாள் - என்பது தத்துவார்த்தமான உண்மை.

"கஞ்சிவாதப்பா!" என்றால் "எங்கு வரதப்பா?" என்றவன் கதைபோல் போக தத்துவார்த்தமான இந்த உண்மையை யுணரமாட்டாதார், தாரை குருபத்னியா யிருந்தும், சிஷ்யனான சந்திரனோடு போனாளென்றும் சந்திரனுக்கு ஒரு பிள்ளையைப் பெற்றாளென்றும், குரு லஜ்ஜைகெட்டு அவளை யழைத்தாரென்றும், லோகாயதமாக அர்த்தம் செய்து கொண்டு அநர்த்தம் விளைக்கிறார்கள்.

ராதை ஸ்ரீகிருஷ்ணனையே புருஷோத்தமனென்றுணர்ந்து அப்பரம புருஷனை ஆச்ரயித்தடைந்தபொழுது அவளுக்கு லோகாபவாதம் கட்டிய உலகஞானிகளான லோகாயதரிஷிகள் முன்னர் அவள் தன் அபவாதத்தை நீக்க

"ஆயிரம் ஓட்டையுள்ள குடத்தில் நீர் ஒழுகாமல் எடுத்துப்போய்" தன் பதிவிரதாதர்மத்தைக் காப்பாற்றிக்கொண்டதுபோல், தாரையும் யோகதாரகமாய் விளங்கித் தனக்கு வந்த லோகாபவாதத்தைத் தீர்த்துக்கொள்கிறாள். யோக சாதனங்களில் உண்மையாய்ப் பழகுகிறவர்கள் அதிகமின்மையால், அவ்வுண்மை சாமானியருக்குப் பிரசித்தமாகாமல், யோகியர்களுக்குள் மட்டும் பிரசித்தமாய் வழங்கிவருகிறது.

யோக தாரகமான லக்ஷியம் சாதாரண மனிதனை (இந்திரியாந்தமான) உயர்பாவத்துக்குத் தூக்கி உண்மை மனிதனாக, அதாவது, தியானயோகியாகச் செய்கிறது. நமது ஆச்சாரிய ஸ்வாமிகள் செய்தருளியிருக்கும் "யோகதாராவளி"யைப் பார்த்தால் உண்மை விளங்கும். அமெரிக்காவிற்றோன்றி பரமயோகியாய்விளங்கிய "ரால்ப் வால்டோ எமர்ஸன்" என்பவரும் இந்த யோகதாரகத்தை மெச்சி "Hitch your wagon to a star." என்று சொல்லியிருக்கிறார். அது நமது விவேகசிந்தாமணியின் மேற்பக்கத்தில்பொருளடக்கம் சொல்லும் அட்டவணைக்குமேலாக அச்சிட்டு விளங்குகிறது. அப்படியென்றால் "யோகதாரகமாம் லக்ஷியத்திற் சிந்தையைவைத்துஇல்லறமென்னும் இயல்புடைய வான்சகடத்தைச் சேலுத்து" என்று அருத்தம். இவ்வைகமிய லக்ஷியார்த்தமாகக் கொண்டு, "எம்மதமும் சம்மதமே" யென்ற குருவாக்கை யனுசரித்து "நமது மதம் மானிடரின் ஹிருதயத்தைச் சுத்தி செய்வதே" என்கிற இன்னொரு எமர்ஸன் வாக்கியத்தையும் தலைப்பேட்டின் கீழே யச்சிட்டிருக்கிறோம். அது "Our Theism is the Purification of the Human Mind" என்று இங்கிலீஷில் அச்சிடப்பட்டிருக்கிறது. ஹிருதய சுத்தியினாலேயே எல்லாச்சித்தியு முண்டாமாகையால் அதுவே எம்மதத்திலும் சம்மதான நன் மதமாம்.

ஓம் தத்ஸத்.

## *The Benificent Light of Yôga—Foreword.*

"I TOLD YOU 'I AM THE LIGHT:' LOOK AT ME!"—GURU VAK.

### சிவயோகதீபிகை.

(முகவுரை.)

இந்தச் சஞ்சிகைமுதல் ஸதாசிவ ப்ரஹ்மம் என்று சிறப்புப்பேர் பெற்ற ஸதாசிவயோகீந்திரர் இயற்றியருளிய சிவயோகதீபிகை யென்னும் பூர்வகிரந்தத்தின் தமிழ் மொழிபெயர்ப்பை, பழையபிரதிகளையும் ஏட்டுச்சுவடிகளையும் கொண்டு ஆராய்ந்து பரிசீலனை செய்து திருத்தியபடி விவேகசிந்தாமணியில் வெளியிட்டுவரத் துவக்கியிருக்கிறோம். வித்தை சுத்தம், அசுத்தமென இரண்டு வகையாவது போல், யோகமும் சுத்தம், அசுத்தமென இருவகைப்படும். அவற்றில் சுத்தயோகம் "சித்த-விருத்தி நிரோதனமாம்." அசுத்தயோகமென்பது சித்த விருத்தியைத் தடுக்காமல் தானே மனோசக்தியை பலப்படுத்திக் கொண்டு காமிய வழியில் பல ஸித்திகளைத் தேடி யனுபவிப்பதாம். இது காமியகர்மார்த்தமானதால், இதற்கு ஸித்தியானது சூன்யத்துவமென்று சொல்லப்படும். ஆதலால் இதற்கு சூன்யவித்தை யென்றும் "Black Magic" என்றும் பேர் வந்தது.

தற்பொழுது உலகெங்குமுண்டாயிருக்குமொரு மனக்கிளர்ச்சியால் தத்துவவிசாரம் செய்வோர் அல்லது செய்ய விரும்புவோர் தொகை யதிகமாக தினேதினே விருத்தியாகிப் பெருகிவருகிறது. இவர்களிற் பெரும்பாலார் ஐஹிகார்த்தமாகவே (இகலோக சாதகமான க்ஷணிகசுகத்தையே கோறி) மனோதத்துவங்களை ஆராய்ந்து தேர்ந்து அதனால் மற்றவர்களைத் தம் வசப்படுத்த வேண்டும் அல்லது மற்றவர்களைவிடத் தாம் விசேஷமாய் விளங்கவேண்டுமென்று சிந்தித்து யோகத்தைச் செய்ய இச்சிக்கிறார்கள். இன்னும் சிலர் ஜீவனார்த்தமாக வசிகரவித்தை (Hypnotism) ஆகர்ஷண

வித்தை (Mesmerism), மந்திரவித்தை (Mental cures), தந்திரவித்தை யல்லது ஜாலவித்தை (Spirit-phenomena) முதலிய சூன்யவித்தைகளில் (Black Arts) பழகிப் பிரசித்தி பெறலாமென்று முயற்சிக்கிறார்கள். இவர்களுக்கேற்க மேற்றிசையார், முக்கியமாய் அமெரிகாவிலுள்ள அனேகர், மனோதத்துவங்களில் ஒருபாகத்தைமட்டும் கற்று அதில் ஏதோ ஒருவித சித்தியடைந்து, படித்தவர், பாமரர், முதலான எல்லாஜனங்களையும் மயக்கி தபால் மூலமாய் மந்திரயோக சம்பந்தமான வித்யாதத்துவங்களைப் பணத்துக்கு விற்றுப்போதிப்பதாக இரகஸியமான புஸ்தகங்களில் அதிசாமான்யமான சில மனோதத்துவங்களைப் பிரம்மை (மயக்கம்) உண்டாகப் பிரமாதமாகச் சிலாகித்துக்கூறி ஆசைகாட்டிக் கடைசியில் மோசம்போகும்படியாக வில்லங்கம் விளைத்துவருகிறார்கள். இப்படி போகவித்திகளுக்கு ஆசைப்பட்டு கைப்பணத்தைக்கொடுத்து, அவர்கள் "அதிரகஸியம்" என்று குறிப்பிட்டு அனுப்பும் புஸ்தகங்களை குருமுகமானதத்துவவிசாரமின்றி வாசித்து ஏதோ சில சாதகங்களை இரகஸியமாய்க் கைக்கொண்டு ஏழைமதிகளானசிலரைத்தூங்க வைத்தும், இன்னும் சிலருக்கு "ஏவல்" என்னும் ஆக்ஷேபத்துக்கிடமான மனோசிட்சையால் சில வியாதிகளைச் சொஸ்தம் செய்தும், தமக்கு ஏதோ யோகவித்திகள் வந்துவிட்டதென்று மலைத்து மனப்பால்குடித்துப், பின்னால் மனோஸம்ஸ்காரங்கள் இடைவிடாதெழுந்து தொந்திரவுபண்ண மனோவாதை பொறுக்கமாட்டாமல் தூக்கமும் கெட்டு, சொப்பனமும் பயங்கரமாகமுடிய, திஹில்கொண்டு மனஎக்கம் பிடித்து 'உப்புக்கண்டம் பறிகொடுத்த பார்ப்பினி' கதையாக ஒன்றும் சொல்லமாட்டாமல் தவித்துக் கடைசியில் உபத்திரவம் பொறுக்கமாட்டால் தங்கள் அனுபவத்தை "அதிரகஸியம்" என்று குறிப்பிட்டு விசாரபுருஷர்கட்குத்தெரிவிக்க, அவர்கள் இவர்களுடைய பரிதாப நிலையை யுணர்ந்து "இரகஸியத்தில்" ஏதும் செய்வது உசிதமன்றென்றுன்னி, அவர்களைத் தங்கள் வினைப்பயனை யனுபவிக்கும்படி விட்டு விடுகிறார்கள். இப்படிப்பட்ட கேஸ்கள் எத்தனையோ நமக்குத்தெரிந்தது. நேரில் நம்மிடம் வராமல் தபால் மூலமாகவும், அபற்சார்பாகவும் கேள்விப்பட்டது எத்தனையோ! இப்படி அரைகுறையாக யோகஸாதனங்களைப் பழகிக் கெட்டுப்போகிறவர்கள் ஒருபக்கமிருக்க, உண்மையாக உள்ளபடி மனோதத்துவங்களை யோக முறைபற்றி ஆராயவேண்டுமென்று ஆவலுற்றுத் தபால் மூலமாய் தீக்ஷை கேட்பவர் பலர்.

தபால் மூலமாய் தீக்ஷைகொடுப்பது சாத்தியமில்லாமையாலும் குருமுகமாயன்றி யோகசாஸ்திரமும் மனோதத்துவங்களும் உண்மையாக உளவறிந்து பயில்வதற்கேலாதனவாகையாலும், அசுத்தமான சூன்யவித்தையைச்சேர்ந்த அசுரயோகத்தைத் தள்ளி, நன்மையை நாடி, நன்மையேகருதி, நலந்தரும் யோகமாம் சிவயோகத்தை, அந்தயோகத்தில் கரைகண்டு தேர்ந்தவரும் மஹாசித்தருமான ஸதாசிவ யோகீந்திரர் கருணை மிகுதியால் சற்சீஷனுக்குத் திருவருள் சாதித்துக் கூறியபடி பூர்வீகமான கிரந்தத்தைக்கொண்டு ஆராய்ந்து பிரசுரிக்கத் துணிந்தோம். இந்த யோகசாதனங்கள் அதிரகஸியமானவைபற்றி அவைகளை அயோக்கியர்களும் அநாதிகாரிகளும் கைப்பற்றாதபடி யோகசாதகர்களுக் கெளிதான சில பரிபாஷைகளை (வெள்ளையாய்ச் சொல்லாமல்) ப்ராசீன மொழிபெயர்ப்பில் பெரியோர் சொல்லியபடி அப்படியே பிரசுரிக்கத் தீர்மானித்தோம். இப்பூர்வ கிரந்தத்தைப் பரிசிரம மெடுத்துக்கொண்டு மிகவும் பழுதான பூச்சியரித்த பழைய ஏட்டுச்சுவடியை மிகப் பொறுமையோடாராய்ந்து, அதற்குச் சரியான ஸம்ஸ்கிருதப்பிரதியை மியூஸியம் ஓரியண்டல் லைப்ரேரியிலும் வேறு இடங்களிலும் ஆராய்ந்து சரிபார்த்துச் சுத்தப்பட எழுதின விவேகசிந்தாமணி கமிட்டி

யின்காரியதரிசி ம-ா-ா-ஸ்ரீ,மு.கோ. நாராயண ஸ்வாமி அய்யர் பிஏ, பி. எல், ஹைகோர்ட்டுவக்கீல் அவர்களுக்குத் தமிழுலகம் கடமைப்பட்டிருக்கிறதைத் தெரியப்படுத்துவது நம் கடனுமென்று இம்முகவுரையில் அஃதை வெளியிட்டுரைக்கலானோம். அசத்துக்களும்,அயோக்கியர்களும், சத்துக்களுக் குபயோகமாகப்பிரசுரிக்கப்படும் இந்த குப்தசாதன முறைகளைத் துர்ச் சிந்தையோடும் அப்பியஸித்து துர்க்கிருத்தியத்திற் பிரவேசிப் பார்களானால் அந்த துராத்மாக்கள் சித்தர்கணத்தால் சபிக்கப்படுவதன்றி இகத்திலும் பரத்திலும் தீராத்தொல்லை யனுபவிப்பார்கள் என்பதை யாவருமறியவற்புறுத்திக்கூறி எச்சரிக்கலானோம். "துராத்மா" யாரெனில்,—

"வசஸ்யேக மனஸ்யேக கர்மண்யே கமஹாத்மநாம் !

வசஸ்யந்யத் மனஸ்யந்யத் கர்மண்யந்யத் துராத்மநாம்." என்பதிலிருந்து யாவரும் அறிந்துகொள்ளலாம்.

ஓம் சதாசிவ ப்ரஹ்மணேநமः.

## *SIVA YOGA DEEPIKA.*

### By Sri Sadasiva yogindra.

## சிவயோகதீபிகை.

சதாசிவ யோகீந்தரரால் திருவாய்மலர்ந்தருளப்பட்ட சிவயோகதீபிகையின் மொழிபெர்ப்பு * ஓர் பிராசீன தமிழ்மொழி பெயர்ப்பை யனுசரித்துச் சீர்திருத்தப்பட்டது.

அந்தரங்க பூஜாவிதான மென்னும் முதல் படலம் மொழிபெயர்த்தவரின் அவதாரிகை:—

ஸ்ரீசதாசிவ யோகீசுவரர் என்பவர் தம்மாலியற்றப்பட்ட சிவயோக தீபிகை யென்னும் யோக சாஸ்திராரம்பத்திலே ஹிருதய புண்டரீக வாஸியாயிருக்கும் ஜ்யோதிர் லிங்கத்தை பஜிக்கிறேனென்று அந்த லிங்கபூஜாவிதியையே மங்களமாகக் கூறுகின்றார்.

(1) பரமயோகீசுவரர்களுடையமனமாகிய தாமரைப் புஷ்பத்திற்குவண்டுபோலவும்,மூவித காரணங்களுக்கும் காரணமாகவும், அவ்வியயமாகவும், சகுண நிர்க்குணத்துவ ஸ்வரூபமானதும், ஜநந மரணங்க ளில்லாததுமான் குருவவரூபமான சதாசிவலிங்கத்தை நான் பஜிக்கின்றேன்.

என்றிந்தப் பிரகாரம் குரு நமஸ்காரம் செய்து சதாசிவ யோகீசுவரரானவர் சிவயோக தீபிகையென்கிற கிரந்தத்தை ரசிக்கத் துடங்குகிறார்.

### முதல் படலம்.

(2) ஸ்ரீகுருவி னுடைய பிரசாதத்தால் சிவஸ்வரூபமான யோகத்தை நன்று யறிந்து (அஞ்ஞானிகளுக்கு) ஸுஞ்ஞானம் உண்டாகும் பொருட்டு சிவயோக தீபிகை யென்கிற கிரந்தத்தைச் சொல்லுகிறேன்.

(3) சிவதத்துவ ஸ்வரூபத்தை அறிந்தவர்களுக்குள்ளே உத்தமனான சிஷனே சிவயோகமானது பரம ரகசியமான போதிலும் உன்னுடைய பக்தி விசேஷத்தாலே அதை நானிப்போ துனக்குச் சொல்கிறேன் கேள்.

(4) சிவயோகமானது மந்திரயோகமென்றும், லயயோகமென்றும் ஹடயோக மென்றும், ராஜயோகமென்றும், நாலுவிதமாயிருக்கும். அவை பரமேசுவரராலே போதிக்கப்பட்டதென்று முன்னோர்களான ரிஷீசுவரர், சித்தர் முதலானவர்கள் சொல்லுவார்கள்.

* இவ்வபூர்வக்கிரந்தமானது ம-ா-ா-ஸ்ரீ மயிலை அழகப்பமுதலியா ரவர்களால் உபகரிக்கப்பட்டதும் சம்ஸ்கிருத பாஷாமூலத்துடன் யாரோபூர்வீகர்ஒருவரால் செய்யப்பட்ட தமிழ் மொழிபெயர்ப்புடன் கூடியதுமான ஓர் ஏட்டுப் பிரதியின் உதவியாலும் திருநெல்வேலி ம-ா-ா-ஸ்ரீ S. பால்வண்ண முதலியாரவர்களாலுதவப்பட்ட மொழிபெயர்ப்புப் பிரதி ஒன்றின் உதவியாலும், சமஸ்கிருத பாஷையி லுள்ள மூலத்திற் கேற்ப திருத்தி எழுதப்பட்டது.

(5) மந்திரயோகாப்பியாசம் செய்பவன் மோக்ஷார்த்தமாக ஓரக்ஷரம், அல்லது மூன்றக்ஷரம், அல்லது எட்டக்ஷரம் கூடிய மந்திரங்களில் ஒன்றை எக்காலமும் ஜெபம் செய்ய வேண்டும்: (இதை மந்திரயோகமென்றறிக.)

(6) எவனுடைய சித்தமானது தியானத்தால் மனோ வாயுக்களோடு அல்லது நாதத்தோடு கூடி லயிருக்கின்றதோ அவனே லயயோகி யென்னப்படுவன்.

(7) யாதாமொருவன் அஷ்டாங்க மார்க்கத்தினாலும் தசவித (பத்துவித) முத்திரைகளினாலும், காணங்களாலும், (மூல, உட்டியான, ஜாலந்தரமாகிய மூன்று) பந்தங்களாலும், அல்லது அப்படியே கேவல கும்பகத்தினாலும் வாயுவை வசப்படுத்தினவனா யிருக்கின்றானோ அவன் ஹடயோகி யாவான்.

(8) யாதாமொருவன் (அந்தர், பாகிய, மத்திய மென்கிற மூன்று) லக்ஷியங்களினாலும் பிரஹ்ம சாக்ஷாத்காரத்தை யடைவானோ, அல்லது ஞானத்தாலாகிலும் மனோ விருத்திகளில்லாம லிருப்பானோ அவனே ராஜயோகி யென்னப் படுவான்.

(9) இந்த யோகங்கள் நாலும் முறையே ஒன்றைப்பார்க்க வொன்று விசேஷமாக விருக்கும். இவைகளில் ராஜயோகமானது மிகவும் உத்தமமானது.

(10) அந்த ராஜயோகமும் சாங்கியமென்றும், தாரக மென்றும், அமனஸ்க மென்றும் மூன்றுவிதமா யிருக்கும். அவற்றுள் இருபத்தைந்து தத்துவங்களையும் அறிவது சாங்கிய யோக மென்று சொல்லப்படும்.

(11) பாஹ்ய முத்திராலக்ஷண மறிவது தாரகயோக மென்னப்படும். அந்தர் முத்திரா லக்ஷண மறிவது அமனஸ்க மென்னப்படும்.

(12) சாங்கிய யோகத்தைப் பார்க்க தாரக யோகம்மேலாகும். தாரக யோகத்தைப்பார்க்க ராஜயோகம் மேலாகும். சகலயோகங்களுக்கும் ராஜாவான படியால் இது ராஜயோக மென்னப் படும்.

(13) ராஜயோகத் திற்கும் சிவயோகத் திற்கும் நாமபேதமே யல்லாமல் அனுபவபேத மில்லை; ஆகிலும் சிவத்தை விரும்பினவர்க்கு அவர்கள் புத்தி (அந்த யோகத்திடம்) பிரவிர்த்திக்கு நிமித்தம் சிவயோகம் முக்கியமென்று (மகரிஷிகளாலே) சொல்லப்படும்.

(14) அப்படி சிவத்தை அபேக்ஷிக்கிறவர்களுக்கு அவைகளுள் பேதம் பிரதிபாதிக்கப் பட்டதாகையால் தெரிந்தவர் இக்கேவல சிவயோகத்தையே முக்கியமாகக் கிரகிக்கவேண்டும்.

(15) இச் சிவயோகமானது சிவத்தியானம் சிவபக்தி, சிவஞானம், சிவவிரதம், சிவார்ச்சனை என ஐந்து விதமாயிருக்கும்.

(16) சிவார்ச்சனை செய்யாதவன் பசுவே யென்பதிற் சந்தேக மில்லை. அப்படிக் கொத்தவன் சதாகாலமும் சம்சாரசாகரத்திற் சுழன்று திரிபவன்.

(17) முன்னோர்களான வித்துவான்களால் நிச்சயிக்கப்பட்ட உண்மையான தத்துவத்தை உனக்குச் சொல்கிறோம் கேள். (அந்தத் தத்துவ மானது) சகல தெய்வமயமாயும், சர்வ பூத மயாரயும்,

(18) சர்வ ஞானமயராயும், சகல தத்துவங்களுக்கும் உத்தமோத்தமராயும், சர்வதேஜோமயராயும், சர்வமான (ஜகத்துக்கும்) ஆநந்த சுவரூபராயும், (இருப்பவர்—)

(19) மாயையோடு கூடினபோது சகலர், தனித்திருக்கும்போது நிஷ்களர், 'உளன்-இலன்' எனுமிரண்டு பேதமுமற்றவர், வாக்குக்கும் மனதுக்கும் எட்டாதவர்.

(20) ஒரு வர்ணமு மில்லாதவர், பல வர்ணமு முள்ளவர், ஒரு ரூபமு மில்லாதவர், சகல ரூபமு முள்ளவர், பரமாத்மா, பரப்பிரஹ்மம் எனப் பலவித நாமங்களோடு கூடி (சர்

வாந்தர்யாமியாய்) சித்பிரகாசமான சிவம் என்று சொல்லப்பட்ட ஓர் தேவனிருக்கிறார்.

(21) அப்படிப்பட்ட சிவனிடத்திலிருந்து ஓர் சக்தி பிறக்கின்றது. அந்தச் சக்தியானது சாந்தி யென்றும், அதீதை யென்றும், பாரத்மிகை (பரை) யென்றும் (பெயர்களுடனே கூடி) இவ்வளவென்று அளவிடக்கூடாத குணங்களுடன் கூடி சிவனுடைய ஆஞ்ஞையால் பிரகாசித்துக் கொண்டிருக்கும்.

(22) அச்சக்தி ஐவிதபேதமாய், பஞ்சப் பிரஹ்ம ரூபமாயும், பஞ்ச பூதமயமாகவும், எப்பொழுதும் விளங்கிக்கொண் டிருக்கும். அந்தச்சக்தியினிடத்தி லிருந்து சகல பிரபஞ்சமும் பிறந்தது.

(23) இந்தச்சக்தியிலிருந்து முதலில் சதாசிவதேவ ருண்டாகி ஆகாசதத்துவத்தில் பிரகாசித்துக் கொண்டிருக்கிறார். சதாசிவத்தினிடத்திலிருந்து ஈசுவரன் பிறந்து வாயுதத்துவத்தில் பிரகாசிப்பர்.

(24) அந்த ஈசுவரனிடத்தி லிருந்து ருத்திரன் பிறந்து அக்நியில் பிரகாசிக் கின்றார். அந்த ருத்திரனிடத்திலிருந்து மஹா தேஜஸ்வியான விஷ்ணு பிறந்து ஜலதத்துவத்தில் பிரகாசிப்பர்.

(25) அந்த விஷ்ணுவி னிடத்திலிருந்து பிரஹ்ம தேவன்பிறந்து பிருதிவியிலே பிரகாசிப்பர். இந்தப்பிரகாரம் அந்த பராசக்தியிலிருந்து லோகநாதர்களான பஞ்சமூர்த்திகளும் உற்பவித்தார்கள்.

(26) நிவிருத்திகலை, பிரதிஷ்டாகலை, வித்தியாகலை, சாந்திகலை, சாந்தியதீதகலை ஆகிய இவ்வைந்து கலைகளும் பிரஹ்மதேவன் முதற்கொண்டு ஐந்து மூர்த்திகளிலும் சேர்ந்திருக்கும்.

(27 - 29) இந்த ஐந்து சக்திகளும் சிவனுடைய ஆஞ்ஞையாலே மகாப்பிரகாசமாக விளங்கும் (இவர்கள் பிரகாசத்திற் குட்பட்ட) பிரமதேவனாலே தேவதைகள், அசுரர்கள் முனீசுவரர்கள், மனிதர்கள், ஸ்வேதஜங்கள் (வியர்வை ஜலம் முதலானவைகளில் உண்டாகும் புழு பூச்சி மீன் முதலியவைகள்), அண்டஜங்கள் (முட்டையில் பிறக்கும் பக்ஷிமுதலியவை), ஜராயுஜங்கள் (கர்ப்பப்பையில் பிறக்கின்ற மனிதர், மிருகம் முதலியவை), உத்பீஜங்களாகிய புல், செடி, கொடி, மரம் முதலானவைகளும், மலைகள், நதிகள், மற்றும் சமுத்திரங்கள், தடாகங்கள், இந்த நாலுவகைப் பிறப்புள்ள சகலஜகங்களும் முறையே உண்டாகின்றன. ஆகவே சகலஜகத்தும் (சிவனுடைய ஆஞ்ஞையால் உண்டாகின்றமையால்) சிவமயமெனப்படும்.

(30) யாதாமொருவன் இவ்வித லக்ஷணங்களோடு கூடினதும் கேவல சித்ஸ்வரூபமானதும், சூர்ய சோமாக்னி மும்மண்டலங்களிலும் நிற்கும் சிவத்தை, குருபிரசாதத்தினாலே மும்மலங்களையும் போக்கி (நன்றாயறிந்து) தியானித்து பூஜிக்கின்றானோ அவன் மோக்ஷ சுகத்தை யடைவான்.

(31) முன்சொன்ன சிவஞானம் சகுணம் நிர்க்குணமென இருவகையா யிருக்குமென்றறிக. முன்னர் சகுணத்தை யனுஷ்டித்துப் பின்பு நிர்க்குணத்தை யப்பயசிக்க வேண்டும்.

(32) அதில் சகுணமானது உள்ளும் புறம்பும் பிரகாசித்துக்கொண்டு வெகுபேதங்களாகச் சொல்லப்பட்டிருக்கும். நிர்க்குண ஸ்வரூபமானது ஆகாசத்தைப்போல் இந்திரியம் முதலியவைகளால் அறியக் கூடாததாயிருக்கும்.

(33) இவ்வித சகுண நிர்க்குண பேத தத்துவஞானம் குருமுகத்தால் மாத்திரம் அறியப்படும் (வேறு விதத்தில் அறியக்கூடாது). ஆகையால் மோக்ஷத்தை யபேக்ஷித்தவர்கள் சற்குருவையே (எக்காலமும் பூஜிக்கவேண்டியது).

(34) மனிதனானவன் தீர்க்காயுள், ஆரோக்கியம், பெருஞ்செல்வம், வித்யை, கீர்த்தி, சுவர்க்கசுகம், மோக்ஷம் இப்பலன்களை யெல்லாம் குருகடாக்ஷமின்றி யடையமாட்டான்.

(35) ஆகையால் (சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட) சகல லக்ஷணங்களோடும் கூடிய(ஸர்வஞ்ஞான) குருவை மனம், வாக்கு, காயம் (என்கிற திரிகாணங்களாலும்)சாக்ஷாத் சிவமாகவே பாவித்துப் பூஜிக்கவேண்டும்.

(36) ஆகையினால் குரு வாக்கியத்தால் (போதிக்கப்பட்டு) தீக்ஷிதனான (திக்ஷையை யடைந்தவனான) யாதாமொருவன் சிவத்தை (குருவையே அச் சிவஸ்வரூபமாகப் பாவித்து பூஜிப்பானோ அவனுக்கு (தர்ம, அர்த்த, காம, மோக்ஷமென்னும்) நானு புருஷார்த்தங்களும் அவன் உள்ளங்கையிலிருக்கும்.

(37) குருசொன்ன மார்க்கமாக ஒருகாலமானாலும், இருகாலமானாலும், ஒரே காலமானாலும், (தனது சக்திக்குத்தக்கதாக) சித்பிரகாசரான சிவத்தைப் பூஜைபண்ண வேண்டும்.

(38) அந்தச் சிவபூஜையானது அந்தர்யாகமென்றும் (அந்தரங்கபூஜை யென்றும்) பஹிர்யாக மென்றும் (பாஹிய பூஜையென்னும்) இரண்டுவிதமாயிருக்கும். அதில் அந்தர்யாகமாகிய பூஜை முக்கியமாகும். பாஹிய பூஜை சாமான்யமாகும்.

(39) சத் புருஷாளான பெரியோர் அத்தியந்த பிரகாசமாய் சாந்த ஸ்வரூபமான பரமேசுவரனைத் தங்கள் (சுத்தசங்கல்ப) மனத்திலே பிரகாசிக்காநின்ற ஆத்மாவினிடத்தில் (தரிசித்து சதாகாலமும் தியானம் பண்ணி) பூஜிக்கின்றார்கள். அற்பபுத்தி யுள்ளவர்களான அவிவேகிகள் பாஹியத்திலே (தாம்பிரம், தாரு=கட்டை, மிருத்திகை மண், இதுகளாலே நிர்மாணிக்கப்பட்ட) பிரதிமாரூபங்களாக பாவித்து கந்தபுஷ்பாக்ஷதை முதலிய பாஹிய கிரியைகளால் பூஜிப்பார்கள்.

(40) அந்தரங்க பூஜையாவது தன் ஹ்ருதயத்தை ஓர் தாமரைப் புஷ்பமாகப் பாவித்து அப்புஷ்பத்திற்கு சிவதர்மமாகிற கந்தத்தையும், [சிவநேசமாகிற ஸுவர்ணத்தையும்] சுகஞானமாகிய (செவ்வியஞானமாகிய) நாளத்தையும் (தண்டையும்), எட்டு ஐசுவரியங்களாகிய எட்டிதழ்களையும், வைராக்கியமாகிய கர்ணிகையையும், சந்திரனைப்போன்ற நிறத்தையும், ஸ்ரீ ருத்திரனாகிய கேசரங்களையு முடையதாகப்பாவித்து அதன்மத்தியில் விளங்குகின்ற சூர்ய சோமாக்கினி மண்டலமத்தியத்தில் பிரகாசிக்கின்ற சின்மயமான சிவனைத் தியானஞ் செய்யவேண்டும்.

(41) (இப்படிச்சித்பிரகாசமான சிவஸ்வரூபத்தை எப்படித் தியானம் பண்ணவேண்டுமென்றால்) பிரசன்னமான முகத்தையுடையவராயும், சாந்தராகவும், பதினாறு வயதுள்ளவராகவும், மிருந்த பிரகாச முள்ளவராகவும் கோடிமன்மத ஸமானமான அழகுடன் கூடிய ரூபத்தை யுடையவராயும்,

(42) பின்னும் நானு புஜங்களுடையவராகவும், மான், டங்கம், அபய வரத ஹஸ்தங்கள் உடையவராகவும், அர்த்தசந்திரனைச் சிரசில் பூஷணமாக உடையவராகவும், சரத்காலத்து பூர்ண சந்திரப் பிரகாசமாகவும்,

(43) திவ்யவஸ்திரம், திவ்யகந்தம், திவ்ய ஆபரணங்கள், திவ்ய புஷ்பங்கள் இவை களாலலங் கரிக்கப்பட்ட வராகவும்,

(44) மூன்று நேத்திரங்களுடன் கூடினவராகவும், முக்குணங் களுக்கு மாதாரமாகவும், மும்மலங்களையும் போக்கக் காரணமானவராகவும், இடது துடையிலிருக்கும் பார்வதி தேவியால் சோபிக்கப் படுகிறவ ராகவும்,

(45) பின்னும் பலபுஷ்பங்களோடு நிறைந்து பிரகாசிக்கும் கற்பக விருக்ஷத்தினடியில் வேதிகையின் மேல் நவரத்தின சிம்மாசனத்தில் வீற்றிருந் தருள்பவராயும்,

(46) பின்னும் துவைதமற்ற ஏகவஸ்துவாயும், விகாரநாச மில்லாதவராயும், விஷ்ணுவாயும் (சர்வவியாபியாய்), நித்தியராயும், மோக்ஷத்துக் கதிகாரியாயும், சிந்தைக்கெட்டாதவராயும், பிறவியற்றவராயும், இப்படிக்கொத்தவரென்று நிர்ணயிக்க கூடாதவராயும், ஆதிமத்தியாந்த ரஹிதராயும்,

(47) இவ்விதம் பரமசிவத்தை ஹிருதயத்தில் தியானம் பண்ணி நிச்சலமான மனதோடு அந்தரங்க திரவியங்களால் சாவதானமாகப் பூஜிக்கவேண்டும். அது எவ்விதமெனில், மேல் சொல்லுவோம்!

(48) (அவ்வந்தரங்க பூஜாக்கிரமமாவது) சிவத்துக்குச்சாந்தியென்னும்ஜலமே அபிஷேகதிரவிய மாகவும், சகல வஸ்துக்களிலும் பூர்ணபாவனையே வஸ்திரமாகவும்,(இச்சா,ஞான, கிரியா) சக்திகளே (மூன்று நூலுள்ள) யஞ்ஞோபவீதமாகவும், சுத்தவித்தையே (ஸ்வஸம்வித்-தன்னிறிவு) கந்தமாகவும் (வாசனைத்திரவிய மாகவும்), மிகுந்த பூததயவே அக்ஷதை யாகவும், பிரகாசமான பத்தியே புஷ்பமாகவும் பாவித்துச் சமர்ப்பிக்கவேண்டும்.

(49) (மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும்) அந்தக்கரணங்கள் நாலையும் தூப மாகவும் (சுரோத்திரம் முதலான) ஞானேந்திரியங்களைத் தீபமாகவும் விளக்கி, சுகதுக்கங்களற்ற ஜீவனையே நைவேத்தியமாக சமர்ப்பிக்கவேண்டும்.

(50) பின்னும் சத்துவ ரஜஸ் தமஸென்னும் முக்குணங்களையே தாம்பூலமாகவும்,பிராணனையே நமஸ்காரமாகவும், இப்பிரகாரம் பரமேசுவரனுக்கு அந்தரங்கமாக பூஜாதிரவியங்களைச் சம்பாதித்துப் பூஜிக்கவும்.

(5.) அல்லது அந்தரங்கத்தில் பரமாத்மாவான பரமசிவத்தை மிகுந்த பக்தியுடன் மஹாராஜாவைப் போல் வாகனம் முதலிய ராஜோபசாரங்களால் பூஜைசெய்வாயாக.

(52 - 53) இவ்வித அந்தரங்கபூசை சமஸ்த பாபங்களையும் போக்கி, சமஸ்த துக்கங்களையும் நீக்கி, சிவத்தினிடத்தில் மிகுந்த பக்தியைக்கொடுத்து, மனதைநிர்மலமாய்ச்செய்து, சகல ஐசுவரியங்களையும் கொடுத்து தெள்ளிய யோகத்தையும் ஞானத்தையும் கொடுக்குமாதலால், இந்த அந்தரங்கபூஜையையே எக்காலும் செய்யக்கடவாய் (என்று குருமூர்த்தியானவர் சிஷ்யனுருக்கு அனுக்கிரகம் பண்ணினார்).

சிவயோகதீபிகையில்
அந்தரங்க பூஜாவிதானமென்கிற முதல் படலம்
முற்றிற்று.



## *Sita - A Tale of Hindu Domestic Life.*

## சீதா, அல்லது இல்லறவாழ்க்கை.

28 - வது அதிகாரம்,

தங்கத்துக்கு காமேசுரய்யா வீட்டில் இருக்கிறதில் திருப்தி யில்லை. ஒரு வருஷம் இருந்துபார்த்தாள், பிறகு ராமச்சந்திரனைச் சேர்ந்த அசூயையால் பங்களாவுக்குப் போவதாய்த் தீர்மானித்தாள். இராமச்சந்திரன் அவளை யிருக்கச் சொல்லியும் அவள் தன் கெட்ட எண்ணத்தால் புறப்படுவதிலேயே தீர்மானமாயிருந்தாள். தங்கம் பங்களாவுக்கு வருவதாக வேம்பய்யர் பங்களாவை யெல்லாம் ஒழித்துவைத்து இவர்கள் வரவை எதிர்பார்த்திருந்தார். ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் ஒருவருஷத்துக்கு லீவ் வாங்கிக்கொண்டுவந்திருந்தார். தங்கம் ஸ்ரீநிவாஸசாஸ்திரிகளெல்லாரும் பங்களாபோய்ச் சேர்ந்ததும் அங்கேநடந்திருந்த சங்கதிகளைக்கேட்க அவர்களுக்கு வெகு ஆச்சரியமாயிருந்தது. அந்தக்கிழவியம்மாள் என்பாரா இருக்கவேண்டும்? அவள் தங்கத்தின்காதில் பாசியறைக்குள் போகாதே என்று செல்லக் காரணமென்ன? பிறகு பங்களாவுக்கு வந்து உள் உள்ளே சோதனைபோடகாரணமென்ன? மேற்குவீட்டு பழைய அறைகளெல்லாம் திறந்துபார்க்கக் காரணமென்ன? இதெல்லாம் ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளுக்கு பயத்தையும் ஆச்சரியத்தையும் கொடுத்தது. அவர் ஒருவேளை தங்களுக்கு ஏதாவது அபாயத்தைத் தேடுகிறவர்களோவென்று பயந்

தார். தங்கத்துக்கு இவைகளை யெல்லாம் நினைக்க நினைக்க வெகுபயமாயிருந்தது. வேம்புவய்யர் நடந்த சங்கதிகளையெல்லாம் விபரமாகச் சொல்லி நானும் உங்களைபோலவே சந்தேகித்து அவர்களைப் போலீஸில் பிடித்துவைத்து விடலாமென்று பார்த்தேன். ஆனால் தங்கள்கடிதத்தால் அவளை ஒன்றும் செய்யக்கூடவில்லை என்றார். ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் பிறகு நாம் இங்கே அதிகமாக இருக்கக்கூடாதென்று மறுநாள் கமலாவடிக்குப் புறப்படவேதாகத் தீர்மானித்தார். மறுநாள் அந்தப்படி பயணத்துக்குத் தயாராய் இருக்கும் சமயத்தில் ஓர் வயதுசென்ற கிழவன் ஓடிவந்து ஸ்ரீநிவாச சாஸ்திரிகள் இரண்டுகைகளையும் பிடித்துக்கொண்டு 'அய்யா தாங்கள் பெரியவரா யிருந்தால் நான் நமஸ்காரம்கூடச் செய்வேன். ஏழைபேரில் இரங்கவேண்டும். எனக்கும் ஒத்தாசைசெய்து காப்பாற்றவேணுண்டும் என்று கண்ணில் நீர்வடியச் சொன்ஞன். ஸ்ரீநிவாஸசாஸ்திரிகள் என்னவென்று கேட்க கிழவன் சரித்திரத்தை அடியில் வருமாறு சொன்ஞன். அவன் சரித்திரம் ஆரம்பித்ததற்குள் வேம்பய்யர் வந்து பார்த்து அய்யா இவர்தான் முன்வந்த கிழவனென்ருர். ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் அதைக்கேட்டு நடுங்கினுர். கிழவன் அதைக்கண்டு அய்யா தாங்கள் ஏன் என்னைக்கண்டு நடுங்கவேண்டும்! நான் தங்களுக்கு என்ன தீங்கு செய்யக்கூடும்! என்சரித்திரம் முழுவதையும் கேட்டால் தாங்களே என்னைக் கண்டு பரிதாபப் படுவீர்கள்.

"நான் என் ஒரேதமக்கையாகிய தாங்கள் பார்த்த கிழவியின் தாயாரோடு வெகுநாளிருந்தேன். எனக்கு உற்ருருறவினர் ஒருவரும் கிடையாது. எனக்கு பிள்ளையும் கிடையாது. ஆதலால் அந்தக் கிழவியையே எனக்குப் பெண்போல் வளர்த்து வந்தேன். பிறகு ஓர்தூரதேச யாத்திரை செய்யும்படி வந்துவிட்டது. அதற்காக நான் போய் விட்டேன். நான் போயிருந்த காலத்தில் என் தமக்கையு மிறந்துபோய்விட்டாள். அந்தச் சமாச்சாரம் எனக்குத் தெரியவேயில்லை. ஐயோ அந்தக் காலத்தில் என்மருமகள் பட்டகஷ்டம் சொல்லி முடியாதாம். பிறகு இதைப்பார்த்து பரிதபித்து அவளுக்கு கலியாணம்முதல் உங்கள் மாமஞர் சேஷய்யர்தான் செய்துவைத்துக் காப்பாற்றினுராம். அந்த மகராஜன் வெகுநாளிருக்கலாம், அல்பாயுஸாய் போய்விட்டார். அதுவும் என்மருமகள் துரதிஷ்டம் தான்", என்று சற்று தயங்கினுன்.

இதைக்கேட்டிருந்த தங்கம் ஒஹோ சுப்புவா! அய்யோ எனக்குத் தெரியாமல் போயிற்றே! அவள் அடையாளம் கூட தெரியவில்லையே என்ருள். கிழவன்: "ஆமாமா சுப்புதான் அவள்பெயர். அவள் உங்கள் வீட்டைவிட்டுப் புறப்பட்டு வெகுநாள் அலைந்ததில் அவள் அடையாளம் கூட தெரியாமல் இருக்கும்படி இளைத்துப்போய் விட்டாள். ஒரு அல்பகடிதத்துக்காக பயந்துகொண்டு வீட்டைவிட்டு ஓடிப்போய் விட்டாள்" என்று மறுபடியும் சற்று தயங்கினுன்.

ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் ஒஹோ!முன்னமேயே எங்கள்மாமஞருக்குஒருகடிதமெழுதிவைத்ததாகவும் அதில் ஒருகடிதத்தை வீட்டில் ஒளித்துவைத்திருந்ததாகவும் எழுதியிருந்ததாகச் சொன்னுர்களே அது தானே?

கிழவன் "ஆமாம் அய்யா! அது தான். அந்தபாழுங்கடிதத்தால் தான் அவள் உயிர் போய்விடும்போலிருக்கிறது. பிறகு சமாசாரத்தைக்கேளுங்கள். நான் வெகு தூரதேசங்களி லெல்லாம்போய் அவளைத் தேடினேன்: கடைசியில் ஒரு ஊரில் அவள் அகப்பட்டாள். பிறகு சமாசாரங்களை யெல்லாம் விசாரிக்கவும் அவள் தான் கல்யாணம் செய்துகொண்டது, ஒரு பெண்பிறந்து அது அறையிலேயே இறந்தது, அதன்பிறகு தன் எஜமானி இறந்தது, கடிதம்கொடுத்தது, அதைவீட்டில்ஒளித்துவிட்டு ஓடிப்போனது எல்லாவற்றையும்சொல்லி மறுபடியும் தங்கள் சம்ஸாரத்துக்கு பிரசவ சமயத்தில் அவள் பக்கத்துவூரிலிருந்ததாகவும் தாங்கள் போய்க் கூப்பிடவும் உங்களையெல்லாம் தெரிந்துகொண்டு கடிதத்தின் சமாசாரத்தை அறியும் பொருட்டே யுங்கள் பெண்ஜாதிக்கு அவள்மருத்துவம் செய்ததாகவும் நீங்கள் ஓர் அறையை ரிபேர் செய்வதாக சொன்னதற்கு அவள்எங்கே கடித்தை எடுத்துவிடுவார்களோ வென்று பயந்து அந்த அறைக்குப்போகாதே என்று காதோடுசொல்லவும், அவளை நீங்கள் துறத்திவிட்டதாகச்சொல்லி, உடனே அந்தக்கடிதத்தை வெளியில் எடுத்து வேறு இடத்தில் வைக்காமல்போனுல் தன் உயிர்போய்விடுமென்று அழுதாள். நான் அதனுல் அவளைக் கூட்டிவந்து அந்தப்படியே ஒத்தாசை செய்தேன். தங்கள் பங்களாவுக்கு அதற்காகத்தான் இரண்டுநாள் வந்தேன். இரண்டாவது நாளில் என் மருமகள் அந்த உள்புறம்போய் பயந்து ஓடிவந்து மூர்ச்சையாய்விட்டாள். பிறகு நாங்கள் போய்விட்டோம். அதன்மேல் அவள் என்னிடத்தில் இருக்கமாட்டே னென்று சொல்லி ஓடிப்போய்விட்டாள். நான் மறுபடியும் அவளைத்தேடிக் கண்டுபிடித்தேன். அவள் மனோ

வியர்தியினால் அவஸ்தைப் பட்டுக்கொண்டு உயிர் போய்விடும்போலிருக்கிறாள். அய்யா தாங்கள் தயவுசெய்து அந்தக்கடிதத்தைச் சோதனை செய்கிறதில்லையென்று சொல்லவேண்டும். அதுதான் நான் உங்களைக்கேட்டுக்கொள்வது. இது நிச்சயம். நீங்கள் சொல்லிவிட்டால் அவள் பிழைத்துக் கொள்வாள். அய்யா என்மருமகளுக்கு உயிர்ப்பிச்சை கொடுங்க'' ளென்று கிழவன் அழுதுகொண்டு கேட்டான்.

ஸ்ரீநிவாச சாஸ்திரிகள் மனமிறங்கி அந்தக் கிழவனுக்குத் தான் ஒத்தாசை செய்வதாய்ச்சொல்லி அவனையும் நிறுத்திக்கொண்டு அந்த உள்களை சோதனை போட ஆரம்பித்தார். கிழவன் அய்யா அந்த அறைகளை நீங்கள் சோதனைபோடக் கூடாதென்பதல்லவா என்பிரார்த்தனை என்றான். ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் தான்சோதனை போடுவதாயும் அதைத் தெரிந்து கொண்டு பிறகு அவளிடம் கடிதத்தை பார்க்கவே யில்லையென்று சொல்லிக் கடிதத்தைக் கூட கிழவனிடம் கொடுத்து விடுவதாகவும், கிழவன் தன் மருமகளிடத்தில் ஒருவரும் அறியாமல் கடிதத்தை எடுத்துவந்து விட்டதாகச் சொல்லிக் கொள்ளலா மென்றும் சொன்னார்.

அவைகளை சோதித்ததிலநேகம் அறைகள் இருந்தன. பாசியறையென்பது இது தான் என்று தெரியவில்லை. பிறகு ஸ்ரீநிவாஸசாஸ்திரிகள் அந்த அறையை எப்படி கண்டுபிடிப்பதென்று யோசித்துப் பார்த்தார். ஒன்றும் தோன்றவில்லை. கடைசியில் எஜண்டு வேம்பய்யர் ஒருபாயம் சொன்னார். என்னவென்றால், மேல்புறம் வீடுகட்டினபோது அதற்காக பிளான் எழுதப்பட்ட தென்றும் அது இப்போது காமேசுவரய்யரிடம்இருக்கவேணுமென்பதே. உடனே காமேசுவரய்யரைக் கேட்க ஒரு ஆள் அனுப்பினார். சாமேசுவரய்யருக்கு தங்கத்தின் மீது இருந்த கோபத்தில் அதைக்கொடுக்கமாட்டேனென்று சொல்லிவிட்டார். காமேசுவரய்யர் இதன் பிறகு அந்தபிளான்ஞாபகத்துக்கு வந்து பிளான்களையெல்லாம் தனியாக எடுத்து ஒரு பீரோவில் வைத்தார். பீரோவின் சாவி சிலசமயங்களில் அவர் பரிசாரகனிடத்தில் கூடகொடுக்கப்படும் பிளானை கேட்கப்போன ஆள் இதை யெல்லாம் அறிந்துகொண்டு அங்கேயே இருந்துகொண்டு பரிசாரகனுக்கு ஐம்பதுரூபாய்கொடுத்து அதைநகல்செய்து தரும்படி சொன்னான். பரிசாரகன் அதை தனியாய்க்கொண்டுபோய் ஒருவருக்கு அஞ்சுரூபாய் கொடுத்து நகல்செய்யும்படிசெய்து அதை ஆள்வசம் கொடுத்து விட்டான். ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் போன ஆளுடைய வரவை வெகு ஆவலுடன் எதிர்பார்த்தார். ஆள் ஒருவாரத்திற்குப் பிறகு பிளானுடன் வந்தான், எல்லோரும் உட்கார்ந்து பார்க்கவும் ஸ்ரீநிவாஸசாஸ்திரிகள் வெகு சந்தோஷத்துடன் அகப்பட்டுவிட்டதென்றார். அந்த பிளானில் வடக்குக்கோடி உள்ளுக்குப் பாசிஅறையென்று எழுதி இருந்தது. உடனே எல்லோரும் போய் அந்த உள்ளைத் திறந்தார்கள். அந்த உள்ளில் ஒவ்வொருசாமான்களையும் எடுத்து பிறித்துப் பார்த்தார்கள். ஒன்றிலும் ஒருகடிதத்தையும் காணோம். மற்ற பிறைகள் சந்துகள் எல்லாவற்றையும் பார்த்தார்கள். பழைய கடிதங்களும் கிழிந்து போன படங்களும் அகப்பட்டனவேயன்றி வேறு நல்லதாக ஒன்றும் அகப்படவில்லை; கடைசியில் ஒன்றையும் காணோமே என்று மலைத்தார்கள். இப்படியிருக்கத்தங்கம்அதோ பாருங்கள் ஒரு அலமாறி இருக்கிறது, சுவருக்கும் அதுக்கும் வித்தியாசமே தெரியவில்லை; அதைத் திறந்து பாருங்களென்றார். உடனே கொத்துதிறவுகோல்களைபோட்டுப் பார்த்ததில் ஓர் திறவுகோல் சேர்ந்தது; அலமாறியைத்திறந்து பார்த்தார்கள். அதில் இரண்டுபடங்களிருந்தன. தங்கம் அதை ஆவலுடன் பார்க்க அதில் ஒன்று தன்தாயினுடையதும் மற்றது சேஷய்யருடையது மாயிருந்தது. தங்கம் அவைகளைத் தனியாக எடுத்து வைத்தாள். அப்படங்களை எடுத்த வுடன் அதன்பின் ஓர் சிறியபெட்டி இருந்தது. அதைத் திறப்பதற்கு திறவு கோல்களைப் போட்டுப் பார்த்தார்கள், ஒன்றுக்கும் சேரவில்லை. வேறு திறவுகோல்களையும் காணோம், எல்லோரும் என்ன செய்கிறதென்று விசாரப்பட்டுக்கொண்டிருக்க தங்கம் படம் நன்றாய், இருக்கிறதென்று ஒரு படத்தை எடுத்து முன்புறம்பார்த்து விட்டுப் பின்புறம் திருப்பினாள். அதில் ஓர் திறவுகோல் சொருகப்பட்டிருந்தது. உடனே அந்தத்திறவுகோலை யெடுத்து அப்பெட்டிக்குப் போட்டுப் பார்த்தாள். அது பெட்டியில் சேர்ந்தது. பெட்டியை எல்லாரும் வெகு ஆவலுடன் திறந்து பார்த்தார்கள். அதில் ஓர்கடிதம் வைக்கப்பட் டிருந்தது. ஸ்ரீநிவாஸசாஸ்திரிகள் உடனே கடிதத்தை எடுத்துப்பார்த்தார். தங்கம் இது என் தாயாரின் கையெழுத்துத்தானென்றாள். கிழவனுக்குக் கடிதம் அகப்பட்டதில் வெகு சந்தோஷம். ஸ்ரீநிவாஸசாஸ்திரிகள் உடனே கடிதத்தை வாசிக்கவேண்டுமென்றார். தங்கம் 'அதை வேம்பய்யர் முன் வாசிக்ககூடாதென்று உள்ளே கொண்டு

போய்விட்டாள். வெம்பய்யருக்கு வெகு வருத்தம். 'நாம் இவ்வளவுபிரயாசைபட்டும் நம்மிடத்தில் வித்தியாசம் நினைத்து விட்டாள் பார்' என்று சொல்லிக் கொண்டார். உள்ளே போனதும் கிழவன் தங்கம் இரண்டுபேரைமட்டும் வைத்துக்கொண்டு ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் கடிதத்தை அடியில் வருமாறு வாசித்தார்.

"என் பிரியமுள்ள பிராணநாதருக்கு அநேக நமஸ்காரம். நான்பெரிய மோசக்காரியாகப் போய்விட்டேன். ஆனாலதற்காகத் தாங்களென்மீது கோபித்துக்கொள்ளக்கூடாது. குழந்தை தங்கத்தையும்வெறுக்கக்கூடாது. சாகிறகாலம் வந்துவிட்டபடியால் இனி நான் அதைத் தங்களிடம் மறைப்பது சரியல்ல. அய்யோ ஒரு குழந்தை இல்லையென்று நீங்கள் என்னை ஏன் திரும்பிப்பாராமல்கூட இருந்தீர்கள்! ஊரார் குழந்தையெல்லாம் ஏன் எடுத்து வைத்துக் கொஞ்சினீர்கள். அடிக்கடி 'உனக்கொரு குழந்தை இருந்தால் தான் நானுன்னைமதிப்பே'னென்று ஏன்சொல்லிவந்தீர்கள். ஆகா! எனக்கும் அதை கேட்கக்கேட்க உயிரைவிட்டு விடலாம் போலிருந்ததே. மேலும் நமக்கு ஒருபெண்கூட இராமல் எல்லாசொத்தையும் மைத்துன்மார்கள் அடைகிறதா என்று எனக்கு ரோசம் பொறுக்க முடியவில்லை. தாங்களும் குழந்தை இல்லாமல் என்னை லட்சியம் செய்வதில்லை. நானென்ன செய்கிறது! ஒருகுழந்தை என்று பெயருக்காவது வைத்துக்கொள்ளவேண்டுமென்று தீர்மானித்தேன். சுப்புகர்ப்பமானாள். அவளுடன்நானும்கர்ப்பமானதாக சொல்லிக்கொண்டேன். சுப்புவும் நிஜமென்றே நம்பினாள். பிறகு மாசம் ஆக ஆக என் வீட்டிலும் ஒருவரும் இல்லாததால் சுப்புவை நான் சத்தியம் செய்யச்செய்து நான் கர்ப்பம் இல்லையென்பதை வெளியிடாமல் இருக்கச்செய்து கர்ப்பமென்று வெளியில் நம்பும்படி செய்தேன். கடைசியில் பிரசவ சமயத்தில் சுப்பு குழந்தையை நான் ஒளித்து வைத்து குழந்தை இறந்துவிட்டதென்றேன். இரண்டுநாளைக்குப் பிறகு நான் பிரஸவித்ததாக வேஷம்போட்டு சுப்பு குழந்தையை வெளியில் காட்டினேன். சுப்பு முதலில் சம்மதிக்கவே இல்லை. பிறகு அவளை அநேகவிதத்தில் பயமுறுத்தினேன். கடைசியில் அவளும் சம்மதித்தாள். சுப்புவைக் கோபித்துக் கொள்ளவேண்டாம். அவள் மீது பிசகே இல்லை. பிசகு எல்லாம் என்னுடையது தான். தங்கம், சுப்பு குழந்தையானபோதிலும். வளர்த்தினவாஞ்சை எனக்குப்போகவில்லை. அவளைத் தாங்கள் தவறவிடக்கூடாது. என்னை மன்னிக்கும்படி நான்ரொம்பவும் கேட்டுகொள்ளுகிறேன். தங்களுக்குப் பெரிய அபராதத்தைச் செய்துவிட்டேன். இப்படிக்குத் தங்கள் 'ஜானகி'—என்று எழுதி இருந்தது.

ஸ்ரீநிவாஸசாஸ்திரிகள் இதைப்பார்த்ததும்ஒன்றும் செய்யத்தோன்றாமல் அப்படியே பிரமித்து நின்றார். தங்கம் தன் கண்களில் தாரை தாரையாக நீர்வடித்தாள். கிழவன் ஆகா! தங்கம் என் மருமாள் பெண்தானா அய்யய்யோ பாவி சுப்பு இதை என்னிடம் சொல்லாமலே ஏமாற்றி விட்டாளே என்றான். ஸ்ரீநிவாஸசாஸ்திரிகள் பிறகு கிழவனைக் கூப்பிட்டு அய்யா இந்தக்கடிதத்தை உங்கள் மருமகளிடம்கொடுத்து விடுங்கள். அவளுக்குத்தைரியம் சொல்லுங்களென்றார். கிழவன் வெகு சந்தோஷமாக அதை வாங்கிக்கொண்டு வெளியிலே போய்விட்டான்.

ஸ்ரீநிவாஸசாஸ்திரிகள் ஒருயோஜனையும் இல்லாமல் கடிதத்தைக் கொடுத்து விட்டார். அன்றைய தினம் முழுவதும் தங்கம், ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் ஒரு யோசனையும் ஓடாமல் வெகுகவலையுடன் இருந்தார்கள். வேம்பய்யருக்கு சமாசாரம் மெள்ள மெள்ள எட்டிவிட்டது. மறுநாள் இதை யோஜிக்க யோஜிக்க ஸ்ரீநிவாஸசாஸ்திரிகளுக்கு ஓர் யோஜனை தோன்றிற்று. தங்கம் சேஷய்யர் பெண்ணல்லவென்றால் சேஷய்யர் சொத்து இராமச்சந்திரனுக்குத் தானே கிடைக்கும். இதற்கென்னசெய்கிறது என்று யோஜித்தார். தங்கத்தினிடத்தில் அவர் இதைச் சொல்லவும் அவள் ஓஹோ கடிதத்தைக்கூடகிழவனிடத்தில் கொடுத்துவிட்டோமே என்றாள். ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் பிறகு கிழவனைதேடச்சொன்னார். எங்கேதேடியும் அவன் அகப்படவில்லை. தங்கம் அதே கவலையாயிருந்தாள். இப்படித் தானென்று நினைக்க தங்கத்துக்கு தெய்வம் ஒன்று நினைத்தது.



# *Mantra-Yoga.*

## Father & Mother Glorified in the Son.

ஷடாக்ஷரீஸ்தவமெனும்

ஶரவணஹவஸ்துதி

(பழனியாண்டவர் துணை)

மாயாண்டிச்சித்தன் ஞானப்பாட்டு.

ஶம் * ஆவிநெக்கு நெக்குருக வன்புமிக வென்புருகவே
ரம் யிதயபுண்டர மலரிலெழு ஸுமுகரஸ வாறுமுக
க்ஷம் ஸம்க்ரமண ஸ்ரீகண்டர் பூர்ணே ரத்துதித்
ணம் துமையன்பிழுக்கவே யசரீரி † ஈ'சரீஇ ரியான
ஹம் ஈரண்ட ஸ்வருபாருப மிவைக்கிலக் காகியே
வம் அனலண்ட மெழுகுபோ லாதாரவாதேய நேரொக்கவே
ஓம் யொருருப மாய்நிற்கு மெழில்பொழி யென்னீசனே!
ந சரணம் சரணமென்றுன் பாதமே யடைந்தேன்
மோ ஶரவண ஹவவென்னைக் காத்தரு ளாயே !
ந ஶக்திவே லாயுத ஸமயந்தப் பாமலே
மஃ கைகொடுத் தென்னைநீ காத்தருள் வாயே !
ஓம் ஓம்ஶர வணஹவ நமோ நமோம்.
தத்ஸத் ஓம்தத் ஸத்இதி நமோ நமோம்.



---

* ஶம் க்ஷுதிதஸ்வார்த்தநேவகேஶாயவாராணேண்யாய நம: ।
ரம் க்ஷஸ்ய ஸ்வார்த்தநேஹஜம்பேஶாயஸாரஹேவ்யாய நம: ।
க்ஷம் ஹஸௌ: ஸ்ரீகண்டேஶாயவர்ணாவர்ணாத்யாய நம: ।
ணம் உமாகாந்தேஶாயஶரீரிணே நம: ।
ஹம் அண்டேஶாயகவசாய நம: ।
வம் ஆத்ஸ்வார்த்தநே வஹ்நேஶாயமாயாவ்யாய நம: ।
ஓம் ஸத்யாஜாதேஶாயஜ்ஞாநஹேவ்யாய நம: ।
ஶரம் த்ரிதீதீஶாய ஜோராக்ஷ்யாய நம: ।

சிறுவர்க்கான பக்கம்.

## கலியாணப் பாட்டு

# ஏசல் பேசல்.



"இச்சாசக்தி உமாகுமாரி."—சிவருத்திரம்.

"அந்தப் பெண்ணைக்கேள்."

தாயார் பெண் சம்வாதம்.

(1) தாயின் கேள்வி.

"அம்மா பெண்ணே தும்பப்பூவே!
ஆம்பான் வந்தால் என்னசெய்வை?"

பெண்ணின்பதில்.

"கட்டிவெல்லத்தைப் புட்டுவைப்பேன்
கறந்தபாலைக் காய்ச்சிவைப்பேன்
உள்ளன்புவைத்தால் உளதெல்லாம்கொடுப்பேன்
கள்ளத்தனஞ்செய்தால் பள்ளிப்பயல் என்பேன்."



(2) தாயின் கேள்வி.

அம்மா பெண்ணே! தும்பப்பூவே!
ஆம்பான் அடித்தால் என்னசெய்வை?

பெண்ணின் பதில்.

I.

ஊசிமேல் தபவிருந்து
உத்தமரே வேணுமென்றேன்!
காசியாத்திரை போனவனைக்
காத்திருந்து அழைத்துவந்தார்
காசாசைப் பட்டவனைக்
காட்டிக்கொடுக் காதேயென்றேன்
காசியாத்திரை போறே'னென்று
ஆசையெல்லாம்விட்டொழித்தான்!
ஆசைவிட்ட பிள்ளையென்று
அப்பா அழைத்துவந்தார்:
ராசியாக மாப்பிள்ளையும்
தேங்காயை வாங்கிக்கொண்டார்
ஆசைவிட்டு ராசியாக
மாப்பிள்ளைக் கோலங்கொண்டு
காசியாத்திரை போனபிள்ளை
திரும்பிவரக் கண்டேனம்மா!

II.

மாப்பிள்ளைக் கோலங்கண்டேன்
மையிட்ட கண்ணுங்கண்டேன்
மௌனவிரதம் பூண்டபிள்ளை
மனதுக் குகந்ததென்று
அம்மானுந் தோளெடுக்க
அவர்மே லிருந்துகொண்டு
உச்சித மாக்கிடைத்த
உயர்ந்ததோர் வரனென்று
கச்சித மாகவேநான்
கைநீட்டி மாலையிட்டேன்:
மாலைவாங்கி மாலையிட்டே
மாப்பிள்ளையை மணக்கவைத்தேன்!
மாலையிட்டு மணக்கவைத்த
மாப்பிள்ளையும் அடிப்பனோடி?
அடித்தால் அவன் கெடுவான்!
ஆண்மைகெட்டுச் சீரழிவான்!



(3) தாயின் கேள்வி.

அம்மா பெண்ணே! தும்பப்பூவே!
ஆம்பான் அழைத்தால் என்னசெய்வை?

பெண்ணின் பதில்.

காசாசைப் பட்டு வந்தால்
காறியுமிழ்வேனடி!
மாசுமறு பட்டுவந்தால்
மறுத்தவனைப் போச்சொல்வேன்!
வேசியென்று எண்ணிவந்தால்
வேலையில்லை போவென்பேன்
தாசியென்று பேசிவந்தால்
தாழ்வில்லை போவென்பேன்!

மாசுமறு வில்லாமல்
மாலையிட்ட மாப்பிள்ளையும்
காசாசை தான்விட்டு
காமேசு வார்போலே
ராசியாய் அன்புவைத்து
ராமரும் வந்தாற்போல்
கூசாம லழைத்தாரானால்
கூடவே நான்போவேன்!

(4) தாயின் கேள்வி.

அம்மா பெண்ணே! தம்பப் பூவே!
மாப்பிள்ளை வந்து மல்லுக்கு நிற்கிறான்
என்னடி சொல்ல நான் கண்மணியே?

பெண்ணின் பதில்.

மாப்பிள்ளை வந்தால்
மல்லுக்குநிற்பானேன்!
ஊர்ப்பிள்ளை வந்தால்
உதவாது போகச்சொல்!
மாலையிட்ட பிள்ளையானால்
மரியாதையா வரச்சொல்!
மரியாதைதப்பி வந்தாலவனைத்
தெரியாதென்று போகச்சொல்!
காசாசைப் பட்டுவந்தால்
காசிக்கே போகச்சொல்!
வீணாசைப் பட்டுவந்தால்
வெறும்மனே போகச்சொல்!
பெண்ணாசைப் பட்டுவந்தால்
பரிவாகப் பேசச்சொல்!
பொன்னாசைப் பட்டுவந்தால்
போகச்சொல்வினையே!

(5) தாயின் கேள்வி.

அம்மா பெண்ணே! தம்பப் பூவே
ஆம்பான்வந்ததோ நிற்கிறானடி!
பெண்ணை விடச் சொல்லியவன்
பேய்க்கூத்து ஆடுறான்டி!
பேய்க்குவாழ்க்கைப் படவோ உன்னைப்
பெற்றெடுத்து வளர்த்தேனடி?

பெண்ணின் பதில்.

'ஆம்பான்' வந்தானானல்,
வீம்பேன் அவனுக்கிப்போ?
ஆண்பிள்ளையவனானல்
அடக்கம் மிகவேண்டும்!
பெண்பிள்ளையானாலும்
பொறுமை மிகவேண்டும்!
ஆணும்பெண்ணு மில்லையானால்
அலியென்றேதா னொடுங்கவேண்டும்!
பெண்ணைவிடச் சொல்லியவன்
பேய்க்கூத்தே யாடவேண்டும்?
நான்மாலையிட்ட பிள்ளையானால்
நலுங்காமற் பேசவேண்டும்!
வேலையற்ற காளையானால்
வேஷம்போட்டு ஆடவேண்டும்!
என்கைபிடித்த புருஷனானல்
யசஸாயென்னை நடத்தவேண்டும்!

## தலைவி தனியிருந்து தோழியுடன் பிரலாபித்தல்.

"மூவாறுமாகின்றாள்
வித்தையொடவித்தையாம்
கலைகளென்ன, காமியமென்ன!"
—ஸ்ரீதேவிஸ்தோத்திரம்.

## முன்றாம் - முதலாம் (Action).

தன் விதியறிந்து விளம்பல்.

1.

காசுபெறாத மாப்பிள்ளை யவன்
காசுக்காசைப்பட்டு ஏங்குறான்டி!

மாசுமறுவில்லா மாப்பிள்ளை யென்று
மணஞ்செய்து கொடுத்தென்னைமகிழ்ந்தாரடி!

2.

ஆயிரங்காலத்துப் பயிராச்சேயென்று
ஆயிரச்செலவில் மணமுடித்தார்!
வாயிரண்டாயிப்போ பேசுராண்டியவன்
தாயில்லாப்பெண்ணென்று தாண்டுறான்டி!

3.

தாயில்லாப்பெண்ணென்று தாழ்ச்சிவாராதே
கோயிலிற்றேவியைக் கும்பிடச்சொன்னார்
கோயிலிற்றேவியைத் தாயென்றுகாட்டியும்
வாயில்லாப்பூச்சிபோற் பேசுறான்டி!

4.

பேசுறான்டியவன் ஏசுறான்டிபின்னும்
நேசமுள் ளவன்போல் நடிக்கிறான்டி
காசுக்குவீங்கிப் பேச்சைவிட்டவன்
தூசும்பெறுமலே தூறுறான்டி.

5.

தூறுறான்டியவன் வீறுறான்டிபின்னும்
கூறுபோட்டென்னைப் பேசுறான்டி
தாறுமாறுயவன், பேசுறான்டிபின்னும்
நூறுபத்தாய் வார்த்தை வாங்குறான்டி!

6.

பெண்ணாசைமண்ணாசைபொன்னாசைமூன்றும்
விண்ணாசைவைத்தவந் தான்விடுப்பார்!
வீணாசைகொண்ட வீணன வீணர்க்கு
நாணாசைகொண்டேனே சொல்லடியே!

ஓம் ஹ்ரீங்காரியைநமஃ

## பின்னுறு - பதிலாறு (**Reaction**).

விதியறிந்து மதியாற்றேறல்.

7.

இல்லறமல்லது, நல்லறமென்பர்
இல்லறக்கிழத்தியை லக்ஷ்மியென்பர்
இல்லறம்விளங்கக் கைப்பிடித்தென்னை
நல்லறம்விளங்காதே நடிக்கிறான்டி!

8.

நடிக்கிறான்'டியவன் படிக்கிறான்'டிபேச்சைத்
துடிக்கிறான்'டியவன் தூய்நெறி விட்டு
நடிக்கினும் படிக்கினும் துடிக்கினும் ஆமோ!
படித்ததற் கொருபலன் இல்லை யேடி!

9.

இல்லை யேடி குணம் அவனிடத்தே
தொல்லை யேடி பின்னும் தனிவாழ்வும்!
கல்லைவைத் தாயினும் கணவ னெனத்தொழ
கல்லுங் கரைந்துருக் காட்டு மேடி!

10.

கல்லையுரு வாக்கும் கற்புள்ள பெண்ணிற்குத்
தொல்லையுண் டோடி தொல்லு லகில்!
கல்லை யமுதாக்கிக் கணவனுக் கிட்டதோர்
எல்லையில் சக்தியும் கற்புக் கல்லோ!

11.

கற்புடைப் பெண்ணிற்குக் கலக்கமுண் டோடி!
விற்புரு வங்களிற் பேத முண்டோ!
கற்புடை யென்தாயார்கலந்தென்னைப்பெற்றவர்
சொற்படி நடக்கச் சுகமல்ல வோடி!

12.

கற்பெனப் படுவது சொற்றிறம் பாமையால்
கற்புடன் கைநீட்டித் தொட்ட வரை
கற்புடன் தெய்வம் என்றுநான் தொழுதால்
கற்புடைச் சக்தியால் கரையேற மாட்டேனே!

ஓம் ஸ்ரீங்காரியைநமஃ

## மூவாறு - முடிவாறு (**Conclusion**).

சதியறிந்து சாக்ஷியுறல்.

13.

சீரும் சிறப்புமாய் வளர்த்தாரடி பெண்ணைச்
சீர்கெடப் போகாதென் றுரைத்தா ரடி!
சீர்செய்யச் சொல்லிக் கேட்கிறடி யிப்போ
சீர்குலைந் தவரைப் பேசுறடி!

14.
பேசுருடியவள் பேச்சு மெத்த
ஏசுருடி யென்னை யேழை யென்று!
காசுக்காசைப்பட்டுச்சொல்லாதவார்த்தையைச்
சொல்லுருடிமிகக் கேடுகெட்டு!

15.
கேடுகெட்டு மிகப் பாடுபட்டுப் பின்னும்
கேடுள்ள வார்த்தையைப் பேசுருடி!
ஆடுபோல் நினைத்தென்னை யாட்டுருடி யவள்
காடுமே டெல்லாய்விட் டோட்டுருடி!

16.
ஓட்டுருடி யவள் ஓட ஓட
மீட்டுருடி பின்னும் வார்த்தை கனே!
தீட்டுருடி கையைத் தேய்த்துக் கொண்டு!
சாட்டுருடி யென்னைச் சாதி கெட்டே!

17.
சாதிகெட் டேயவள் பேசுருடி பின்னும்
சாதிகெட் டுள்ளே மானங் கெட்டு!
சாதியிற்பெண்ணென்றுநினைத்தேனடியிப்போ
சாதிகெட் டுச்சும்மா பேசுருடி!

18.
பேசு' ருடியவள் ஏசு'ருடி பின்னுந்
தேசுற்றவரை மிஞ்சிப் பேசு'ருடி!
காசுக்காசைப்பட்டுத் தூசுபெருமலே
மாசுமறுவுற்றுப் பேசுருடி!

ஓம் ஹ்ரீங்காரியைநம:.



## நாலாறு - மேலாறு (**Rest**).

"All ye that labour and are heavy laden
Come unto me and I will give you Rest".
—Christ

"நாலே சிவபுரமாய்
நல்லவஸ்தைக் கிலக்ஷியமாய்
நாதருடல் கொண்டோடி
நான்மறையி லொளித்ததென்ன!"
—தேவிஸ்தோத்திரம்.

உண்மையறிந் தோங்கல்.

19.
பேராசைகொண்டவள் பேச்சைவிட்டாள்
நேராசைகொண்டதும் நேசமானுள்
தராசுபோல்நிற்கும் மனமேயன்பு
துராசைகொண்டால் துன்பதுவே!

20.
துன்பதுவேபின்னும் இன்பதுவாம்
துன்பிற்றுணிந்துடன் தேறிவிட்டால்
இன்பதுந்துன்பதும் இரண்டலவே!
இன்பதுன்பங்களும் அன்பு வன்பே!

21.
அன்பு வன்பென்பதை யாராயிலோ
அன்பதுவாவதும் அஹக்கண்பார்வை
துன்பதுவாவதும் தூய்மையின்மை
மன்குலத்தவர்க்கது மூடத்தன்மை!

22
மூடத்தன்மையுள்ள மூர்க்கரைநேசிக்கக்
கூடஸ்தன்ஒருவனே கூர்மையுள்ளான்!
தடஸ்தமானதோர் தன்மயங்கண்டவர்
கூடஸ்தரென்றே கூறும்மறை!

23.
மறைகூறும்சொல்*லதுமர்மமடி
பறையறைநா†வது கர்மமடி
குறைகூறும்மன‡மதுகுற்றமடி
நிறைகுடந்தா¶ளுகும் நிர்மலத்தே!

24.
நிர்மலத்தேகர்ம மலங்கழியும்
நிமலன்பரசேவை தான்பெறலாம்
கமலனைப்பெற்ற விமலன்பாதம்பற்றில்
கர்மமலந்தானே கழியுமடி!

ஓம்ஸௌஸ்வஸ்வாஹா

* மஹா வாக்கியமாம் பரைவாக்கு. † வைகரி வாக்கு. ‡ காம சங்கல்பங்களோடு கூடிய அசுத்த மனம். 'ஆசைக்கோரளவில்லை' யென்று தாயுமான வர் பாடியிருப்பதையும் கண்டுகொள்க. ¶ தத்பத லக்ஷியார்த்தமான பூரணத்மாவேயாகும் "நிர்மலசித்தி பெற்ற விடத்தே யென்றபடி.

## Kannaki—A Social Drama.

### கண்ணகி.

அங்கம் II] [காட்சி 4.

இடம்:—காவரியாற்றினருகே ஒரு பூஞ்சோலை.
காலம்:—காலைப்பொழுது.

பாத்திரர்:— கண்ணகி. கோவலன். கவுந்தி (ஓர் சந்நியாசஸ்திரி.) பரத்தை, தூர்த்தன்,ஓடக்காரன் முதலியோர்.

கண்ணகி:—நாதா! நடக்க நடக்க வழி தொலையவில்லை! கால்நோவுகின்றதே! நாவுலருகின்றதே! சரீரம் நடுக்கமுறுகின்றதே! தாகமோ அதிகமாகவிருக்கிறது! என்செய்வேன்! (பெருமூச்சுடன் அயருகிறாள்).

கோவ:—பிராணசகி! இதோ சமீபத்தில் ஒரு சோலைதெரிகிறது! அங்கு போய் இளைப்பாறுவோம்! உன்னால் நடக்கமுடியாது, நீ வரவேண்டாம் என்று சொன்னேனே நீகேட்டாயா?

கண்:—நாதா! தங்களைவிட்டு நான் எவ்வாறு பிரிந்திருப்பது! அதனால் தான் கூடவந்தேன்!

கோவ:—பிராணசகி! இதோ சோலையை நெருங்கி வந்து விட்டோம்! அதோ ஓர் அம்மாவிற்றிருக்கிறார்கள்! அவர்களைப் பார்த்தால் தவத்திற் சிறந்த முதியவர்களாயிருக்கிறார்கள்! அவர்களிடம் செல்வோம்!

கண்:—இனி நமக்கு பயம் நீங்கிற்று! இவர்களையே நாம் சரணமடைவோம்! விரைந்து வாருங்கள்!

(கௌந்திக்குச் சமீபமாய்ச் செல்கிறார்கள்.)

கௌந்தி:—(நிஷ்டையிலிருந்தும் விழித்து இவர்களிருவரையும் நோக்கி) உங்கள் வரவு நல்வரவாகுக!

கோவ:—அம்மணி! சரணம்! (வணங்குகிறான்).

கண்:—மாதவஸ்திரீயே!நமஸ்காரம்(வணங்குகிறாள்).

கௌந்தி:—நீங்களிருப்பது எந்த தேசம்? மனிதர்கள் நடமாடாத இவ்வழியாக நடந்து வரக் காரணமென்ன? உங்களைப் பார்த்தால் நல்ல குலத்திற் பிறந்து நல்ல ஸ்திதியிலிருந்தவர்களைப்போல் காணப்படுகிறதே!

கோவ:—அம்மணி! நாங்களிருப்பது காவிரிப்பூம்பட்டினம்! வாணிபஞ்செய்து பொருள் சம்பாதிக்கலாமென மதுரையைநாடிச் செல்லுகிறோம்.

கௌந்தி:—எனக்கும் மதுரைக்குவர வேண்டுமென விருப்ப மிருக்கிறது! மதுரையிலுள்ள கற்றாரிடம் அறநூல்களைக்கேட்க வேண்டும்! ஆதலால் நானும் உங்களோடு வருகிறேன்!

கண்:—அப்படியே! தங்கள் சித்தப்படி செய்யுங்கள்.

கோவ:—எனக்கும் சம்மதமே!

கௌந்தி:—வாருங்கள்! அரங்கமடைந்து சாரணர்களை தரிசித்துப் போவோம்!

(மூவரும் போகிறார்கள்).

கண்:—சாரணர்களை தரிசித்து விட்டோம்! இனி எங்கு செல்வது?

கௌந்தி:—ஓடத்திலேறி காவிரியாற்றின் அக்கரைசென்று அங்கிருக்கும் பொழிலில் சற்று நேரம் தங்கியிருந்து பின் மதுரைக்குச் செல்வோம்!

கோவ:—அப்படியே செய்வோம்!

ஓடக்:—எங்குபோக வேண்டும்?

கோவ:—ஆற்றின் அக்கரைக்கு!

ஓடக்:—ஆளுக்கு அரைப்பணம் கொடுக்கவேண்டும்!

கண்:—அப்படியே தருகிறோம்!

ஓடக்:—ஆனால் ஓடத்தில் ஏறிக்கொள்ளுங்கள் (மூவரும் ஏறி அக்கரை செல்லுகிறார்கள்).

கோவ:—இறங்குங்கள்! அந்தப் பொழிலிடம் செல்வோம்!

கண்:—இந்தா! ஓடக்காரா! ஒன்றரைப் பணம்! (பணத்தைக்கொடுக்கிறார்கள்.)

கௌந்தி:—பொழில் இதோ சமீபத்தில் தான் இருக்கிறது! (மூவரும் அவ்விடம் சேருகிறார்கள்).

தூர்த்தன்:—(கண்ணகியை நோக்கி) இவளைப் பார்த்தால் மிகவும் அழகுடைய வளாயிருக்கிறாள்! இவள் சமீபத்தில் சென்று வார்த்தை யாடலாம்! (கண்ணகியை நெருங்கி) அம்மா! நீ இருப்பது எந்த ஊர்? இங்கு ஏன் இவ்வளவு கஷ்டப்படுகிறாய்? என் மனதிற் கிசைந்து நட! உனக்கு வேண்டிய பொருள் எல்லாம் தருகிறேன்!

கண்:—ஹே! மதிமூடா! என்னை யாரென நினைத்தாய்! கொஞ்சமும் மரியாதையின்றி அடாதவார்த்தை யாடுகிறாய்! சீ விலகிப்போ!

பரத்தை:—(கோவலனை நோக்கி) ஹே! மகாபுருஷா! உன்னுடைய சௌந்தர்யத்தைக் கண்டு காதல்கொண்டவளா யிருக்கிறேன்! தயைசெய்து என் இஷ்டத்தை நிறைவேற்று!

கோவ:—அடிபாதகி! கொஞ்சமும் நாணமில்லாமல் என்னிடம் வார்த்தை யாடுகிறாய்! மரியாதையோடு இவ்விடத்தை விட்டுப் போய் விடு!

கௌ:—அதோ ஒரு தூர்த்தனும், பரத்தையும் கோவலனோடும், கண்ணகியோடும், வாதாடுகிறார்கள் போலிருக்கிறது! நான் சமீபத்தில் சென்று பார்க்கிறேன்! (அவ்விடம் செல்லுகிறாள்).

கோ:—(கௌந்தியைநோக்கி) அம்மணி! இவ்விருவர்களும் எங்களுடன் அடாதவார்த்தையாடி அவமதித்துப்பலவாறுபேசுகிறார்கள்!

கௌந்:—இருக்கட்டும்! (அப்பரத்தையையும் தூர்த்தனையும் நோக்கி) நீங்கள் சுத்த காமவசப்பட்டு என்னுடைய குழந்தைகளை அவமதித்துப் பேசியபடியால் இக்கணமே உங்களைச் சபிக்கிறேன்! நீங்களிருவரும் நரியாகப் போகக்கடவது! (இவள் சபிக்கவே அவர்கள் நரியாகமாறி விடுகிறார்கள்)

கோவ:—அம்மணீ! அவர்கள்தான் மதியீனத்தால் அவமதித்துப் பேசினார்கள்! தாங்கள் இவ்வளவு பெரிய சாபம் கொடுத்து விட்டது உங்கள் கருணைக்கு இழுக்காகும்!

கண்:—ஆம்! தயைசெய்து சாபத்தை நிவர்த்தி செய்யுங்கள்!

கௌ:—ஆனால்சரி இன்னும் ஒருவருஷத்திற்குள் அவர்கள் சாபம் நிவர்த்தியாகும்! நாம் புறப்பட்டு மதுரைக்குப் போவோம்! (இப்பொழிலை விட்டுப் புறப்பட்டு நடக்கிறார்கள்).

கோவல:—உறையூரைச் சமீபித்து வந்து விட்டோமே!

கண்:—இங்கு தங்கி யிருப்போம்!

கௌந்:—அப்படியே ஆகட்டும்! (மூவரும் உறையூரை யடைந்து அங்கு தங்குகிறார்கள்).

இரண்டாம் அங்கம் முற்றும்.

